நத்வா ஸர்வே மஹாத்மானம் ததஸ்தே ப்லவக3ர்ஷபா4:।
விஸ்ருஷ்டா: பார்தி2வேந்த்3ரேண கிஷ்கிந்தா4-மப்4யுபாக3மன்।। 87

ஸுக்3ரீவோ வானரச்'ரேஷ்டோ2 த்3ருஷ்ட்வா ராமாபி4ஷேசனம்।
பூஜிதச்'சைவ ராமேண கிஷ்கிந்தா4ம் ப்ராவிச'த் புரீம்।। 88

விபீ4ஷணோऽபி த4ர்மாத்மா ஸஹ தைர்-நைர்ருதர்ஷபை4:।
லப்3த்4வா குலத4னம் ராஜா லங்காம் ப்ராயாத்3-விபீ4ஷண:।। 89

ஸ ராஜ்யமகி2லம் சா'ஸந்-நிஹததாரிர்-மஹாயசா':।
ராக4வ: பரமோதா3ரோ ரராஜ பரயா முதா3।। 90

உவாச லக்ஷ்மணம் ராமோ த4ர்மஜ்ஞம் த4ர்மவத்ஸல:।। 91

ஆதிஷ்ட2 த4ர்மஜ்ஞ மயா ஸஹேமாம்
கா3ம் பூர்வராஜாத்4யுஷிதாம் ப3லேன।
துல்யம் மயா த்வம் பித்ருபி4ர்-த்4ருதா யா
தாம் யௌவராஜ்யே து4ரமுத்3வஹஸ்வ।। 92

ஸர்வாத்மனா பர்யனுநீயமானோ
யதா3 ந ஸௌமித்ரி-ருபைதி யோக3ம்।
நியுஜ்யமானோऽபி ச யௌவராஜ்யே
ததோऽப்4யஷிஞ்சத்3-ப4ரதம் மஹாத்மா।। 93

பௌண்ட3ரீகாச்'வமேதா4ப்4யாம் வாஜபேயேன சாஸக்ருத்।
அந்யைச்'ச விவிதை4ர்-யஜ்ஞை-ரயஜத் பார்தி2வாத்மஜ:।। 94

ராஜ்யம் த3ச'ஸஹஸ்ராணி ப்ராப்ய வர்ஷாணி ராக4வ:।
ச'தாச்'வமேதா4-நாஜஹ்ரே ஸத3ச்'வான் பூ4ரித3க்ஷிணான்।। 95

ஆஜானு-லம்ப3பா3ஹு: ஸ மஹாஸ்கந்த4: ப்ரதாபவான்।
லக்ஷ்மணானுசரோ ராம: ப்ருதி2வீ-மன்வபாலயத்।। 96

ராக4வச்'சாபி த4ர்மாத்மா ப்ராப்ய ராஜ்ய-மனுத்தமம்।
ஈஜே பஹுவிதை4ர்-யஜ்ஞை: ஸஸுஹ்ருஜ்-ஜ்ஞாதி-பா3ந்த4வை:।।97

ந பர்யதே3வன் வித4வா ந ச வ்யாலக்ருதம் ப4யம்।
ந வ்யாதி4ஜம் ப4யம் வாபி ராமே ராஜ்யம் ப்ரசா'ஸதி।। 98

நிர்த3ஸ்யு-ரப4வல்லோகோ நானர்த2: கஞ்சித3ஸ்ப்ருச'த்।
ந ச ஸ்ம வ்ருத்3தா4 பா3லானாம் ப்ரேதகார்யாணி குர்வதே।। 99

ஸர்வம் முதி3த-மேவாஸீத் ஸர்வோ த4ர்மபரோऽப4வத்।
ராமமேவானுபச்'யந்தோ நாப்4யஹிம்ஸன் பரஸ்பரம்।। 100

ஆஸன் வர்ஷஸஹஸ்ராணி ததா2 புத்ர-ஸஹஸ்ரிண:।
நிராமயா விசோ'காச்'ச ராமே ராஜ்யம் ப்ரசா'ஸதி।। 101

ராமோ ராமோ ராம இதி ப்ரஜானா-மப4வன் கதா2:।
ராமபூ4தம் ஜக3த்3பூ4த்3-ராமே ராஜ்யம் ப்ரசா'ஸதி।। 102

நித்யபுஷ்பா நித்யப2லாஸ்-தரவ: ஸ்கந்த4-விஸ்த்ருதா:।
காலே வர்ஷீ ச பர்ஜந்ய: ஸுக2ஸ்பர்ச'ச்'ச மாருத:।। 103

ப்3ராஹ்மணா: க்ஷத்ரியா வைச்'யா: சூ'த்3ரா லோப4-விவர்ஜிதா:।
ஸ்வகர்மஸு ப்ரவர்தந்தே துஷ்டா: ஸ்வைரேவ கர்மபி4:।। 104

ஆஸன் ப்ரஜா த4ர்மரதா ராமே சா'ஸதி நாந்ருதா:।
ஸர்வே லக்ஷணஸம்பன்னா: ஸர்வே த4ர்மபராயணா:।। 105

த3ச'-வர்ஷ-ஸஹஸ்ராணி த3ச'-வர்ஷ-ச'தானி ச।
ப்4ராத்ருபி4: ஸஹித: ஸ்ரீமான் ராமோ ராஜ்யமகாரயத்।। 106

த4ன்யம் யச'ஸ்ய-மாயுஷ்யம் ராஜ்ஞாம் ச விஜயாவஹம்।
ஆதி3காவ்யமித3ம் த்வார்ஷம் புரா வால்மீகினா க்ருதம்।
ய: படே2ச்ச்2ருணுயால்-லோகே நர: பாபாத்-விமுச்யதே।। 107

புத்ரகாமஸ்து புத்ரான் வை த4னகாமோ த4னானி ச।
லப4தே மனுஜோ லோகே ச்'ருத்வா ராமாபி4ஷேசனம்।। 108

மஹீம் விஜயதே ராஜா ரிபூம்ச்'சாப்யதி4திஷ்ட2தி।
ராக4வேண யதா2 மாதா ஸுமித்ரா லக்ஷ்மணேன ச।।
ப4ரதேன ச கைகேயீ ஜீவபுத்ராஸ்-ததா2 ஸ்த்ரிய: ।। 109

ப4விஷ்யந்தி ஸதா3னந்தா3: புத்ர-பௌத்ர-ஸமந்விதா:। 110

ச்'ருத்வா ராமாயண-மித3ம் தீ3ர்க4-மாயுச்'ச விந்த3தி।
ராமஸ்ய விஜயம் சைவ ஸர்வ-மக்லிஷ்டகர்மண:।। 111

ச்'ருணோதி ய இத3ம் காவ்ய-மார்ஷம் வால்மீகினா க்ருதம்।
ச்'ரத்3த3தா4னோ ஜிதக்ரோதோ4 து3ர்காண்யதிதரத்யஸௌ।। 112

ஸமாக3மம் ப்ரவாஸாந்தே லப4தே சாபி பா3ந்த4வை:।
ப்ரார்தி2தாம்ச்'ச வரான் ஸர்வான் ப்ராப்னுயா-தி3ஹ ராக4வாத்।। 113

ச்'ரவணேன ஸுரா: ஸர்வே ப்ரீயந்தே ஸம்ப்ரச்'ருண்வதாம்।
விநாயகாச்'ச சா'ம்யந்தி க்3ருஹே திஷ்ட2ந்தி யஸ்ய வை।। 114

விஜயேத மஹீம் ராஜா ப்ரவாஸீ ஸ்வஸ்திமான் வ்ரஜேத்।
ஸ்த்ரியோ ரஜஸ்வலா: ச்'ருத்வா புத்ரான் ஸூயு-ரனுத்தமான்।। 115

பூஜயம்ச்'ச பட2ம்ச்'சேம-மிதிஹாஸம் புராதனம்।
ஸர்வபாபை: ப்ரமுச்யேத தீ3ர்க4மாயு-ரவாப்னுயாத்।। 116

ப்ரணம்ய சி'ரஸா நித்யம் ச்'ரோதவ்யம் க்ஷத்த்ரியைர்-த்3விஜாத்।
ஐச்'வர்யம் புத்ரலாப4ச்'ச ப4விஷ்யதி ந ஸம்ச'ய:।। 117

ராமாயணமித3ம் க்ருத்ஸ்நம் ச்'ருண்வத: பட2த: ஸதா3।
ப்ரீயதே ஸததம் ராம: ஸ ஹி விஷ்ணு: ஸனாதன:।।
ஆதி3தே3வோ மஹாபா3ஹுர்-ஹரிர்-நாராயண: ப்ரபு4:।। 118

ஸாக்ஷாத்3ராமோ ரகு4ச்'ரேஷ்ட2: சே'ஷோ லக்ஷ்மண உச்யதே।। 119

குடும்ப3வ்ருத்3தி4ம் த4னதா4ன்யவ்ருத்3தி4ம்
ஸ்த்ரியச்'ச முக்2யா: ஸுக2முத்தமம் ச।
ச்'ருத்வா சு'பம் காவ்யமித3ம் மஹார்த2ம்
ப்ராப்னோதி ஸர்வாம் பு4வி சார்த2-ஸித்3தி4ம்।। 120

ஆயுஷ்ய-மாரோக்3யகரம் யச'ஸ்யம்
ஸௌப்4ராத்ருகம் பு3த்3தி4கரம் சு'ப4ம் ச।
ச்'ரோதவ்ய-மேதந்-நியமேன ஸத்3பி4-
-ராக்2யான மோஜஸ்கர-ம்ருத்3தி4காமை:।। 121

ஏவமேதத் புராவ்ருத்த-மாக்2யாநம் ப4த்3ரமஸ்து வ:।
ப்ரவ்யாஹரத விஸ்ரப்3த4ம் ப3லம் விஷ்ணோ: ப்ரவர்த4தாம்।। 122

தே3வாச்'ச ஸர்வே துஷ்யந்தி க்3ரஹணாச்-ச்2ரவணாத் ததா2।
ராமாயணஸ்ய ச்'ரவணாத் துஷ்யந்தி பிதரஸ்ததா2।। 123

ப4க்த்யா ராமஸ்ய யே சேமாம் ஸம்ஹிதா-ம்ருஷிணா க்ருதாம்।
லேக2யந்தீஹ ச நராஸ்-தேஷாம் வாஸஸ்-த்ரிவிஷ்டபே।। 124

இதி ஸ்ரீமத்3வால்மீகிராமாயணே யுத்3த4காண்டே3
।। ஸ்ரீராமபட்டாபி4ஷேக ஸர்க3: ஸம்பூர்ண:।।

# SRIMAD RAMAYANA DHARMA SANGRAHAM

# ஸ்ரீமத் ராமாயண தர்ம ஸங்கிரகம்

1.

अकर्दममिदं तीर्थं भरद्वाज निशामय ।
रमणीयं प्रसन्नाम्बु सन्मनुष्यमनो यथा ॥1.2.5

அகர்தமமிதம் தீர்த்தம் பரத்வாஜ நிசாமய.
ரமணீயம் ப்ரஸன்னாம்பு ஸன்மனுஷ்யமனோ யதா ||1.2.5

(வால்மீகி சிஷ்யர் பரத்வாஜரிடம்) இந்த தீர்த்தம் சேறில்லாமல் எவ்வளவு நிர்மலமாக, மனோஹரமாக, ஸத்புருஷர்களுடைய மனம்போல் இருக்கிறது.

2.

मा निषाद प्रतिष्ठां त्वमगमश्शाश्वतीस्समा: ।
यत्क्रौञ्चमिथुनादेकमवधी: काममोहितम्।।1.2.15।।

மா நிஷாத ப்ரதிஷ்டாம் த்வமகமஶாச்வதீஸ்ஸமா:
யத்க்ரௌஞ்சமிதுநாதேகமவதீ: காமமோஹிதம்।।1.2.15।।

(வால்மீகி மஹரிஷி வேடனுக்குக் கொடுத்த சாபம்)
வேடனே! உனக்கு இனி ஒருக்காலும் அமைதியே கிடைக்காது; ஏனென்றால், காமவசப்பட்டிருந்த கிரௌஞ்ச தம்பதியில் ஒன்றை (ஆண் அன்றிலை) எந்தக் காரணமும் இல்லாமல் கொன்றிருக்கிறாய்.
(மற்றொரு விளக்கம்) லக்ஷ்மீபதியே, காமவசப்பட்ட ஒரு ஆண் ராக்ஷஸனை வதம் செய்து தாங்கள் சாஸ்வதமான நற்புகழைப் பல ஆண்டுகள் பரவும்படிச் செய்தீர்.)

3.

समाक्षरैश्चतुर्भिर्य: पादैर्गीतो महर्षिणा।
सोऽनुव्याहरणाद्भूयः शोकः श्लोकत्वमागत: ।।1.2.40।।

ஸமாக்ஷரைஸ்சதுர்பிர்ய: பாதைர்கீதோ மஹர்ஷிணா .
ஸோநுவ்யாஹரணாத் பூய ஶ்லோக ஶ்லோகத்வமாகத:
।।1.2.40।।

(வால்மீகி மஹரிஷியின் சிஷ்யர்கள் இவ்வாறு பேசிக் கொண்டார்கள்.) மகரிஷியால் (அன்றில் பறவையின் துயரத்தை தாங்கமாட்டாமல்) கூறப்பட்ட சொற்கள் (இலக்கண விதிகளுக்கு ஏற்ப) சமமான எழுத்துக்களோடும், நான்கு பாதங்களோடும் செய்யுள் வடிவில் அமைந்துள்ளன. அவருடைய உள்ளத்தில் சோகம் (அவருக்கு பெரும்புகழ் ஈட்டித்தரும்) சுலோக ரூபமாகிவிட்டது.

4.

कामार्थगुणसंयुक्तं धर्मार्थगुणविस्तरम्।
समुद्रमिवरत्नाढ्यं सर्वश्रुतिमनोहरम्।।1.3.8।।

காமார்தகுணஸ'யுக்த' தர்மார்தகுணவிஸ்தரம் .
ஸமுத்ரமிவரத்நாட்ய' ஸர்வச்ருதிமநோஹரம்।।1.3.8।।

(ராமாயணம்) காமத்தின் பொருளை உள்ளடக்கியது;
அறத்தின் தத்துவத்தை வெகு விரிவாகப் பேசுவது;
ரத்தினங்களைக் கொண்ட சமுத்திரம் போல் ஆழமானது;
எல்லோருக்கும் செவி இன்பத்தை வழங்குவது;

5.

रसैश्शृङ्गार कारुण्य हास्य वीर भयानकैः।
रौद्रादिभिश्च संयुक्तं काव्यमेतदगायताम्।।1.4.9।।

ரஸை ஶ்ருங்கார காருண்ய ஹாஸ்ய வீர பயாநகை:.
ரௌத்ராதிபிச்ச ஸ'யுக்த' காவ்யமேததகாயதாம்।।1.4.9।।

சிருங்காரம், கருணை, ஹாஸ்யம், ரௌத்ரம், பயாநகம்,
வீரம் முதலான சுவைகள்
நிறைந்த காவியத்தை அவர்கள் மெட்டமைத்து
பாடினார்கள்.

6.

तामग्निमद्भिर्गुणवद्भिरावृतां द्विजोत्तमैर्वेदषडङ्गपारगैः ।
सहस्रदैस्सत्यरतैर्महात्मभि र्महर्षिकल्पैरृषिभिश्चकेवलैः
।।1.5.23।।

தாமக்நிமத்பிர்குணவத்பிராவ்ருதா·
த்விஜோத்தமைர்வேதஷடங்கபாரகை:
ஸஹஸ்ரதை ஸத்யரதைர்மஹாத்மபிர்
மஹர்ஷிகல்பைர்ருஷிபிஶ்சகேவலை: ।।1.5.23।।

அந்த நகரத்தில் நித்யாக்னிஹோத்ரிகள், யம-நியமம் முதலானவைகளை கடைப்பிடித்த அஷ்டாங்க யோக சித்தர்கள், ஆறங்கங்களோடு கூடிய வேதங்களை கசடறக் கற்ற அந்தணப் பெரியோர்கள், வாழ்ந்து கொண்டிருந்தார்கள். ஏராளமாக தானம் வழங்குபவர்கள், வாய்மையினின்றும் பிறழாதவர்கள், மாமுனிவர்களைப்போன்று விரதம் அனுஷ்டிப்பவர்கள், நல்லொழுக்கம், தூய வாழ்க்கை நடத்தும் ரிஷிகள் போன்றோர்கள் அயோத்தியில் எப்போதும் நிரம்பியிருந்தார்கள்.

7.

तेन सत्याभिसन्धेन त्रिवर्गमनुतिष्ठता।
पालिता सा पुरी श्रेष्ठा इन्द्रेणेवामरावती।।1.6.5।।

தேந ஸத்யாபிஸந்தேந த்ரிவர்கமநுதிஷ்டதா .
பாலிதா ஸா புரீ ஶ்ரேஷ்டா இந்த்ரேணேவாமராவதீ
।।1.6.5।।

தர்மார்த்த காமங்களைத் தரும் செயல்களில் ஈடுபட்டிருப்பவரும், சொன்னசொல் தவறாதவருமான அவர் (தசரதர்) அமராவதி பட்டணத்தைத் தேவேந்திரன் பரிபாலித்து வருவதைப் போல அயோத்தியில் ஆட்சி செலுத்தினார்.

8.

नाषडङ्गविदत्रासीन्नाव्रतो नासहस्रद: ।
न दीन: क्षिप्तचित्तोवा व्यथितोवाऽपिकश्चन॥1.6.15॥

நாஷடங்கவிதத்ராஸீந் நாவ்ரதோ நாஸஹஸ்ரத: .
ந தீந: க்ஷிப்தசித்தோவா வ்யதிதோவாபிகஶ்சந॥1.6.15॥

(அந்த நகரத்தில்) ஆறு அங்கங்களோடு கூடிய வேதம் அறியாதவர், விரத அனுஷ்டானம் இல்லாதவர், ஆயிரத்திற்குக் குறைவாக தானம் அளிப்பவர், தீனன், நல்மனம் பிறழ்ந்தவன், கவலைப்படுபவன் என்று எவருமே இருக்கவில்லை.

9.

विद्याविनीता ह्रीमन्त: कुशला नियतेन्द्रिया: ।
श्रीमन्तश्च महात्मानश्शस्त्रज्ञा दृढविक्रमा: ॥1.7.5॥

வித்யாவிநீதாஹ்ரீமந்த: குஶலாநியதேந்த்ரியா: .
ஶ்ரீமந்தச்சமஹாத்மாநச்சாஸ்த்ரஜ்ஞாத்ரிடவிக்ரமா: ॥1.7.5॥

ஆழ்ந்தகன்ற கல்வியின் விளைவாக அடக்கம் உடையவர்கள், (தவறு செய்ய) நாணுபவர்கள், செயல்திறன் கொண்டவர்கள், புலனடக்கம் உடையவர்கள், அனைத்து வகையான செல்வச் செழிப்பும் பெற்றவர்கள்; தாராள மனம் உடையவர்கள்; படைக்கலன்களைக் கையாள்வதில் நிபுணர்கள்; மனம் குலையாத உடலாற்றல் பெற்றவர்கள்; அமைச்சர் பொறுப்பில் தொடர்ந்து இருந்து வந்தார்கள்.

10.

कुशला व्यवहारेषु सौहृदेषु परीक्षिताः।
प्राप्तकालंतु ते दण्डं धारयेयुस्सुतेष्वपि।।1.7.8।।

குசலா வ்யவஹாரேஷு ஸௌஹ்ருதேஷு பரீக்ஷிதா: .
ப்ராப்தகால'து தே தண்ட'
தாரயேயுஸ்ஸுதேஷ்வபி।।1.7.8।।

காரியங்களில் திறமை மிக்கவர்கள், சந்தேகத்திற்கு இடமில்லாதபடி பல பரிசோதனைகளில் தேறிய பெருநட்பு உடையவர்கள். குற்றம் செய்த புதல்வனுக்குக்கூட சட்டப்படி தண்டனை வழங்குபவர்கள்; அமைச்சர்களாக இருந்தார்கள்.

11.

छिद्रं हि मृगयन्तेऽत्र विद्वांसो ब्रह्मराक्षसाः।
निहतस्यच यज्ञस्य सद्यः कर्ता विनश्यति।।1.12.17।।

சித்ர'ஹி ம்ருகயந்தேத்ர வித்வா'ஸோ
ப்ரஹ்மராக்ஷஸா:.
நிஹதஸ்யச யஜ்ஞஸ்ய ஸத்ய: கர்தா
விநஷ்யதி।।1.12.17।।

இந்த வித்வான்களாக உள்ள ப்ரம்மராக்ஷஸர்கள் வேள்வியில் குறைபாடுகளைத் தேடியே அலைந்து கொண்டிருப்பார்கள். வேள்வியில் தடங்கல் ஏற்பட்டால் உடனே கர்த்தா (வேள்வியை நடத்துபவன்) அழிந்து போகிறான்.

12.

सर्वे वर्णा यथापूजां प्राप्नुवन्ति सुसत्कृता:।
न चावज्ञा प्रयोक्तव्या कामक्रोधवशादपि।।1.13.13।।

ஸர்வேவர்ணா யதாபூஜா' ப்ராப்நுவந்தி ஸுஸத்க்ருதா:.
ந சாவஜ்ஞா ப்ரயோக்தவ்யா
காமக்ரோதவஷாதபி।।1.13.13।।

வேள்வியில் எல்லா வருணங்களைச் சேர்ந்தவர்களையும் அன்புடன் வரவேற்று கௌரவிக்க வேண்டும். விருப்பு, வெறுப்புகளுக்கும், கோபத்திற்கும் ஆட்பட்டு யாரையும் அவமரியாதை செய்யக்கூடாது.

13.

अवज्ञया न दातव्यं कस्यचिल्लीलयाऽपिवा ।।
अवज्ञया कृतं हन्याद् दातारं नात्र संशयः । ।1.13.30,31।।

அவஜ்ஞயா ந தாதவ்ய' கஸ்யசில்லீலயாபிவா।
அவக்ஞயா க்ருதம் ஹன்யாத் தாதாரம் நாத்ர ஸம்சய:
।1.13.30,31।।

எவருக்கும் அலட்சியமாகவோ விளையாட்டாகவோ எதையும் கொடுக்கக்கூடாது. அலட்சியத்துடன் செய்யப்படும் தான தர்ம காரியம் கொடுப்பவனைக் கொன்றுவிடும் என்பதில் சந்தேகமில்லை.

14.

दीयतां दीयतामन्नं वासांसि विविधानिच।
इति सञ्चोदितास्तत्र तथा चक्रुरनेकश:।।1.14.12।।

தீயதா' தீயதாமந்ந' வாஸா'ஸி விவிதாநிச.
இதி ஸஞ்சோதிதாஸ் தத்ர ததா சக்ருரநேகச:।।1.14.12।।

வேள்வியின்போது கொடு, கொடு, அன்னம் கொடு, ஆடைகள் கொடு, என்று அரசரால் உற்சாகப்படுத்தப்பட்ட அரசுப் பணியாளர்கள், மேலும் மேலும் வாரி வழங்கினார்கள்.

15.

अन्नकूटाश्च बहवो दृश्यन्ते पर्वतोपमा:।
दिवसे दिवसे तत्र सिद्धस्य विधिवत्तदा।।1.14.13।।

அந்நகூடாஷ்ச பஹவோ த்ருச்யந்தே பர்வதோபமா:.
திவஸே திவஸே தத்ர ஸித்தஸ்ய
விதிவத்ததா।।1.14.13।।

குன்றுகளைப் போல் சமைத்த உணவுப் பண்டங்கள் குவிக்கப்பட்டிருந்தன. தினமும் புதிதாக உணவு தயாரிக்கப்பட்டு வழங்கப்பட்டது.

16.

पात्रभूतोऽसि मे ब्रह्मन् दिष्ट्या प्राप्तोऽसि मानद ।
अद्य मे सफलं जन्म जीवितं च सुजीवितम् ॥ ।1.18.53।।

பாத்ரபூதோஸி மே ப்ரம்மன் திஷ்ட்யா ப்ராப்தோஸி மானத ।
அத்ய மே ஸபலம் ஜன்ம ஜீவிதம் ச ஸுஜீவிதம் ||1.18.53।।

(தசரதர் விஸ்வாமித்ரரிடம்) பிரும்மரிஷியே, தாங்கள் என் சேவையைப் பெறுவதற்கு உத்தமமான பாத்திரமாக இருக்கிறீர்கள். என் பெரும் பாக்கியத்தினால் தாங்களாகவே இங்கு வந்துள்ளீர்கள். இப்போதுதான் என் ஜன்மம் பயனுடையதாயிற்று. என் வாழ்க்கையும் நல்வாழ்க்கை ஆயிற்று.

17.

अहं वेद्मि महात्मानं रामं सत्यपराक्रमम्।
वसिष्ठोऽपि महातेजा ये चेमे तपसि स्थिता:। ।1.19.14,15।।

அஹ'வேத்மி மஹாத்மாந' ராம' ஸத்யபராக்ரமம்।
வஸிஷ்டோபி மஹாதேஜா யே சேமே தபஸிஸ்திதா:
।1.19.14,15।।.

(விஸ்வாமித்ரர் தசரதரிடம்) சத்தியபராக்கிரமம் படைத்த மகாத்மா ராமனை (அவன் உண்மை ஸ்வரூபத்தை) நான் அறிவேன். மகாதேஜஸ்வியான வஸிஷ்ட மகரிஷியும் இங்குள்ள மற்றைய தபஸ்விகளும் இதனை நன்கு அறிவர்.

18.

पूर्वमर्थं प्रतिश्रुत्य प्रतिज्ञां हातुमिच्छसि।
राघवाणामयुक्तोऽयं कुलस्यास्य विपर्यय:।।1.21.2।।

பூர்வமர்தஂ ப்ரதிஷ்ருத்ய ப்ரதிஜ்ஞாஂ ஹாதுமிச்சஸி.
ராகவாணாமயுக்தோயஂ குலஸ்யாஸ்ய
விபர்யய:।।1.21.2।।

முன்னதாக ஒப்புக்கொண்டுவிட்டு பின் அந்த சபதத்தை புறக்கணிக்க விரும்புகிறாய். ரகுகுலத்திற்கு இது (சொன்ன சொல் தவறுவது) உகந்ததல்ல. இது குலதர்மத்திற்கு நேர் எதிரிடையானது.

19.

प्रतिश्रुत्य करिष्येति उक्तं वाक्यमकुर्वतः ।
इष्टापूर्तवधो भूयात् तस्माद् रामं विसर्जय ॥ (1.11.8)

ப்ரதிஸ்ருத்ய கரிஷ்யேதி உக்தம் வாக்யமகுர்வத: ।
இஷ்டாபூர்த வதோ பூயாத் தஸ்மாத் ராமம் விஸர்ஜய ॥
(1.11.8)

(வஸிஷ்டர் தசரதரிடம்) 'நான் செய்கிறேன்' என்று பிரதிக்ஞை செய்துவிட்டு, அந்த வார்த்தையைக் காக்காவிடில், முன் செய்த இஷ்ட தர்மம் (பொதுநலனுக்காக செய்த யக்ஞம், பூஜை முதலியன), பூர்த்த தர்மம் (குடிநீர், சாலை முதலியன) எல்லாம் நாசமாகிவிடும். அதனால் ராமனை விஸ்வாமித்திரருடன் அனுப்பவும்.

20.

कौसल्या सुप्रजा राम पूर्वा सन्ध्या प्रवर्तते।
उत्तिष्ठ नरशार्दूल कर्तव्यं दैवमाह्निकम्।।1.23.2।।

கௌஸல்யா ஸுப்ரஜா ராம பூர்வா ஸந்த்யா ப்ரவர்ததே.
உத்திஷ்ட நரஷார்தூல கர்தவ்ய·
தைவமாஹ்நிகம்।।1.23.2।।

(விஸ்வாமித்திரர் ராமனிடம்) எவரைப் பெற்றதால் நல்ல புதல்வனைப் பெற்றவள் என்ற பெயரை கௌசல்யை அடைந்தாளோ, அந்த ஸ்ரீராமா! கிழக்குத் திக்கில் சந்தியாகால அருணோதயம் ஆகிவிட்டது. எழுந்திராய், ஆண் சிங்கமே! வேதவிதிப்படியான நித்திய கர்மானுஷ்டானங்களைச் செய்யவேண்டும்.

21.

न हि ते स्त्रीवधकृते घृणा कार्या नरोत्तम।
चातुर्वण्य हितार्थाय कर्तव्यं राजसूनुना।।1.25.16।।

ந ஹி தே ஸ்த்ரீவதக்ருதே க்ருணா கார்யா நரோத்தம.
சாதுர்வண்ய ஹிதார்தாய கர்தவ்ய·
ராஜஸூநுநா।।1.25.16।।

ராமா! ஒரு பெண்ணைக் கொல்ல வேண்டியிருக்கிறதே என்று மனம் வெறுத்துத் தயங்கக்கூடாது. நான்கு வர்ணத்தாரின் நலனை முன்னிட்டு அரசகுமாரனால் (உன்னால்) இந்த வதம் செய்யத்தக்கது.

22.

नृशंसमनृशंसं वा प्रजारक्षणकारणात्।
पातकंवा सदोषंवा कर्तव्यं रक्षता सदा।।1.25.17।।

ந்ருஶம்ஸமந்ருஶம்ஸம்வா ப்ரஜாரக்ஷணகாரணாத்.
பாதக'வா ஸதோஷ'வா கர்தவ்ய' ரக்ஷதா
ஸதா।।1.25.17।।

மக்களைக் காபாற்றும் பொறுப்பில் உள்ளவர்கள், இது கொடுமை அல்லது கருணை மிகுந்தது என்றோ, மாபாதகம் என்றோ, அறம் பிறழ்ந்த செயல் என்றோ ஆலோசித்துக்கொண்டிராமல், மக்களைக் காப்பது தலையாய கடமை, என்ற நோக்கத்தில் செயல்பட வேண்டும்.

23.

पिता हि प्रभुरस्माकं दैवतं परमं हि नः।
यस्य नो दास्यति पिता स नो भर्ता
भविष्यति।।1.32.22।।

பிதாஹி ப்ரபுரஸ்மாக' தைவத'பரம'ஹி ந:.
யஸ்ய நோ தாஸ்யதி பிதா ஸ நோ பர்தா
பவிஷ்யதி।।1.32.22।।

(ராஜா குசநாபருடைய பெண்கள் வாயு தேவரிடம்) எங்கள் தந்தைதான் எங்களுக்குத் தலைவர், எங்களின் மேலான தெய்வம், அவர் யாருக்கு எங்களைக் கொடுக்கிறாரோ, அவர்தான் எங்கள் கணவர்.

24.

अलङ्कारो हि नारीणां क्षमा तु पुरुषस्य वा।
दुष्करं तच्च यत्क्षान्तं त्रिदशेषु विशेषत:।।1.33.7।।

அலங்காரோஹி நாரீணா' க்ஷமாது புருஷஸ்யவா.
துஷ்கர' தச்ச யத்க்ஷாந்த' த்ரிதஷேஷு
விஷேஷத:।।1.33.7।।

(குசநாபர் தன் பெண்களிடம்) ஆணாக இருந்தாலும், பெண்ணாக இருந்தாலும், பொறுமை என்பது விலைமதிக்க முடியாத அணிகலன் போன்றது. அதிலும், குறிப்பாக தேவதைகளிடம் பொறுமையைக் காண்பது என்பது மிகவும் செயற்கரிய செயல்.

25.

क्षमा दानं क्षमा यज्ञः क्षमा सत्यंहि पुत्रिका:।
क्षमा यश: क्षमा धर्म: क्षमया निष्ठितं जगत्।।1.33.8,9।।

க்ஷமாதாந'க்ஷமாயஜ்ஞ:.க்ஷமாஸத்ய'ஹிபுத்ரிகா:।
க்ஷமாயஷ: க்ஷமாதர்ம: க்ஷமயாநிஷ்டித'ஜகத்.
।।1.33.அ,9।।

பெண்களே! பொறுமையே தானம்; பொறுமையே சத்தியம்; பொறுமையே யக்ஞம்.
பொறுமையே புகழைத் தேடித் தரும்; பொறுமைதான் மிக உயர்ந்த தர்மம்; இவ்வுலகம் முழுவதும் பொறுமையில் நிலைபெற்றிருக்கிறது.

26.

भक्तश्च यः कार्तिकेये काकुत्स्थ भुवि मानवः।
आयुष्मान्पुत्रपौत्रैश्च स्कन्दसालोक्यतां व्रजेत्।।1.37.32।।

பக்தஷ்ச ய: கார்திகேயே காகுத்ஸ்த புவி மாநவ:.
ஆயுஷ்மாந் புத்ரபௌத்ரைஷ்ச ஸ்கந்தஸாலோக்யதா॰
வ்ரஜேத்।।1.37.32।।

காகுத்ஸ்தனே! கார்த்திகேயனிடம் அபாரமான பக்தி கொண்டிருப்பவர்கள், இவ்வுலகில் பிள்ளைகள், பேரன்களுடன் நீண்ட காலம் இருந்து, பின்னர் ஸ்கந்தனுடைய உலகத்தை அடைவார்கள்.

27.

शापात्प्रपतिता येच गगनाद्वसुधातलम्।।1.43.27।।
कृत्वा तत्राभिषेकं ते बभूवुर्गतकल्मषाः।

ஷாபாத்ப்ரபதிதா யேச ககநாத் வஸுதாதலம்।।1.43.27।।

க்ருத்வா தத்ராபிஷேக॰ தே பபூவுர்கதகல்மஷா:.

சாபம் பெற்றதனால் விண்ணுலகத்திலிருந்து மண்ணுலகத்துக்குத் தள்ளப்பட்டவர்கள் (தேவ-கந்தர்வ-யட்சர் முதலானோர்) அந்த (கங்கை) நீரில் நீராடி மாசுகள் நீங்கப்பெற்றார்கள்.

28.

धूतपापा: पुनस्तेन तोयेनाथ सुभास्वता॥1.43.28॥
पुनराकाशमाविश्य स्वाँलोकान् प्रतिपेदिरे।

தூதபாபா: புநஸ்தேந தோயேநாத
ஸுபாஸ்வதா॥1.43.28॥

புனராகாசமாவிச்ய ஸ்வான்லோகான் ப்ரதிபேதிரே ।
தெளிவான ஒளிவீசும் அந்த தண்ணீரால் உலகம்
மகிழ்ந்து களித்து, கங்கையில் மூழ்கி நீராடி பாவம்
நீங்கப்பெற்றார்கள். சுபமான புண்ணியம் பெற்று அவர்கள்
ஆகாசத்தை அடைந்து தங்களுடைய பழைய
உலகங்களுக்கே திரும்பினர்.

29.

कच्चित्ते सम्भृता भृत्या: कच्चित्तिष्ठन्ति शासने।
कच्चित्ते विजितास्सर्वे रिपवो रिपुसूदन॥1.52.8॥

கச்சித்தே ஸம்ப்ருதா ப்ருத்யா: கச்சித்திஷ்டந்தி ஷாஸநே.
கச்சித்தே விஜிதாஸ்ஸர்வே ரிபவோ ரிபுஸூதந !॥1.52.8॥

(வஸிஷ்டர் விஸ்வாமித்திரரிடம்) உங்களுடைய
வேலைக்காரர்களுக்கு போதுமான பொருள் கொடுத்து
ஆதரிக்கிறீர்களா? அவர்கள் உங்கள் உத்திரவுக்குக்
கட்டுப்பட்டு நடக்கிறார்களா? எதிரிகளை மாய்ப்பவரே!
உங்களுடைய எதிரிகள் எல்லோரையும்
வென்றுவிட்டீர்களா?

30.

कच्चिद्बलेषु कोशेषु मित्रेषुच परन्तप।
कुशलं ते नरव्याघ्र पुत्रपौत्रे तवानघ।।1.52.9।।

கச்சித்பலேஷு கோஷேஷு மித்ரேஷுச பரந்தப.
குஷல' தே நரவ்யாக்ர புத்ரபௌத்ரே தவாநக !।।1.52.9।।

குற்றமற்றவரே! எதிரிகளை வாட்டிடும் அரசரே, உங்களுடைய சேனை, கருவூலம், நண்பர்கள், பிள்ளை-பேரர்கள், எல்லோரும் நன்றாக இருக்கிறார்களா?

31.

धिग्बलं क्षत्रियबलं ब्रह्मतेजो बलंबलम्।
एकेन ब्रह्मदण्डेन सर्वास्त्राणि हतानिमे।।1.56.23।।

திக்பல' க்ஷத்ரியபல' ப்ரஹ்மதேஜோ பல'பலம்.
ஏகேந ப்ரஹ்மதண்டேந ஸர்வாஸ்த்ராணி
ஹதாநிமே।।1.56.23।।

(விஸ்வாமித்திரர் வஸிஷ்டரிடம்) க்ஷத்திரிய பலம், பலமா என்ன? பிரும்மதேஜஸ்தான் உண்மையான பலம்! என்னுடைய எல்லா அஸ்திரங்களும் ஒரே ஒரு பிரும்மதண்டத்தால் நாசமாக்கப்பட்டனவே.

32.

उत्तरे दिवसे ब्रह्मन्फल्गुनीभ्यां मनीषिण:।
वैवाहिकं प्रशंसन्ति भगो यत्र प्रजापति:।।1.72.13।।

உத்தரே திவஸே ப்ரஹ்மந் பல்குநீப்யா மநீஷிண:.
வைவாஹிக ப்ரஷஸந்தி பகோ யத்ர
ப்ரஜாபதி:।।1.72.13।।

(ஜனகர் விஸ்வாமித்திரரிடம்) வேதவித்தகரே! பகன் என்பவர் அதிஷ்டான தேவதையாகவுள்ள உத்தரபல்குனீ (உத்தர) நட்சத்திரத்தில் விவாகம் செய்வது சிறப்பைத் தரும் என்று சான்றோர்கள் புகழ்ந்துரைக்கிறார்கள்.

33.

इयं सीता मम सुता सहधर्मचरी तव।
प्रतीच्छचैनां भद्रंते पाणिं गृह्णीष्व पाणिना।।1.73.27।।

இய ஸீதா மம ஸுதா ஸஹதர்மசரீ தவ.
ப்ரதீச்சசைநா பத்ரதே பாணி க்ருஹ்ணீஷ்வ
பாணிநா।।1.73.27।।

(ஜனகர் ராமனிடம்) இந்த சீதை என்னுடைய மகள். தர்ம கர்மாக்களில் உனக்கு அனுசரணையாக இருக்கப் போகிறவள். இவளை ஏற்றுக் கொள். உனக்கு மங்களம் உண்டாகட்டும். (இவளுடைய லட்சுமிகரமான) திருக்கரத்தை (உன்னுடைய வீரத்தை வெளிப்படுத்திய) திருக்கரத்தினால் பற்றுவாயாக.

34.

पतिव्रता महाभागा छायेवानुगता सदा।
इत्युक्त्वा प्राक्षिपद्राजा मन्त्रपूतं जलं तदा।।1.73.28।।

பதிவ்ரதா மஹாபாகா சாயேவாநுகதா ஸதா.
இத்யுக்த்வா ப்ராக்ஷிபத் ராஜா மந்த்ரபூதஂஜலஂ
ததா।।1.73.28।।

இவள் பதிவ்ரதை. பெரும் பாக்கியசாலி. (உன்னை) எப்போதும் நிழல்போல் பின்தொடர்வாள்; என்று கூறி மந்திரங்களால் புனிதமாக்கப்பட்ட தீர்த்தத்தை வார்த்தார்.

35.

कथञ्चिदुपकारेण कृतेनैकेन तुष्यति।
न स्मरत्यपकाराणां शतमप्यात्मवत्तया।।2.1.11।।

கதஞ்சிதுபகாரேண க்ருதேநைகேந துஷ்யதி.
நஸ்மரத்யபகாராணாம் ஶதமப்யாத்மவத்தயா।।2.1.11।।

ராமர் எப்போதோ செய்யப்பட்ட ஏதோவொரு சிறு உதவியாலும் திருப்தி அடைபவர்; பிறர் செய்த நூற்றுக்கணக்கான குற்றங்களையும், தன்னுடைய மேலாண்மைத் திறத்தினால் நினைவில் வைத்துக் கொள்ளாதவர்.

36.

शीलवृद्धैर्ज्ञानवृद्धैर्वयोवृद्धैश्च सज्जनैः।
कथयन्नास्त वै नित्यमस्त्रयोग्यान्तरेष्वपि॥2.1.12॥

ஶீலவ்ருத்தைர் ஜ்ஞாநவ்ருத்தைர் வயோவ்ருத்தைஶ்ச
ஸஜ்ஜநை:
கதயந்நாஸ்தவை
நித்யமஸ்த்ரயோக்யாந்தரேஷ்வபி।।2.1.12।।

நாள்தோறும் அஸ்திரப்பயிற்சி செய்து வருபவர், ஆனால், பயிற்சியின் இடைவெளிகளில் குண-ஞான-வயது முதிர்ச்சி பெற்ற மேலோர்களுடன் பேசிப் பழகி தன் அறிவைப் பல துறைகளிலும் வளர்த்துக் கொள்பவர்.

37.

स तु श्रेष्ठैर्गुणैर्युक्तः प्रजानां पार्थिवात्मजः।
बहिश्चर इव प्राणो बभूव गुणतः प्रियः॥2.1.19॥

ஸ து ஶ்ரேஷ்டைர் குணைர் யுக்த: ப்ரஜாநாம்
பார்திவாத்மஜ:
பஹிஶ்சரஇவ ப்ராணோ பபூவ குணத:ப்ரிய:।।2.1.19।।

அரசகுமாரரான அவர் எல்லாவித உயர்குணங்களும் நிரம்பியவர். அதனால் குடிமக்களின் பேரன்பைப்பெற்று, அவர்களது உடலுக்கு வெளியே உலவுகின்ற உயிரைப் போன்றவர்.

38.

बहुश्रुतानां वृद्धानां ब्राह्मणानामुपासिता ।
तेनास्येहातुला कीर्तिर्यशस्तेजश्च वर्धते ॥ (2.2.33)

பஹுச்ருதானாம் வ்ருத்தானாம்
ப்ராம்மணானாமுபாஸிதா.
தேனாஸ்யேஹாதுலா கீர்திர்யசஸ் தேஜஸ்ச வர்ததே.
(2.2.33)

ராமர் பேரறிவுபடைத்த வித்துவான்கள், வயதில் முதிர்ந்தவர்கள், அந்தணர்கள் ஆகியோரை உபாஸிப்பவர். அதனால் இவ்வுலகில் அவருடைய ஒப்பற்ற புகழ், நற்பெயர், ஒளி எல்லாம் வளர்கின்றன..

39.

शुश्रूषन्ते च वः शिष्याः कच्चिद् वर्मसु दंशिताः।।2.2.39।।
व्यसनेषु मनुष्याणां भृशं भवति दुःखितः।।2.2.40।।

ஶுஶ்ரூஷஶந்தேச வ: சிஷ்யா: கச்சித் வர்மஸு
தம்ஶிதா:.।।2.2.39।।
வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருசம் பவதி து:கித:।।2.2.40।।

உங்களுடைய சிஷ்யர்கள் சோம்பலில்லாமல் சரியாகப் பணிவிடை செய்து வருகிறார்களா? (என்று எங்களையெல்லம் மனிதருள் புலியான ராமன் எப்போதும் விசாரிக்கிறார்). மக்களுக்குக் கஷ்டம் ஏற்படும்போது இவர் மிகவும் துக்கம் அடைகிறார்.

40.

गुणवत्यपि तु स्नेहात्पुत्र वक्ष्यामि ते हितम्।
भूयो विनयमास्थाय भव नित्यं जितेन्द्रियः।।2.3.42।।
कामक्रोधसमुत्थानि त्यजस्व व्यसनानि च ।

குணவத்யபி து ஸ்நேஹாத் புத்ர வக்ஷ்யாமி தே ஹிதம்.
பூயோ விநயமாஸ்தாய பவ நித்யம் ஜிதேந்த்ரிய:।।2.3.42।।
காமக்ரோதஸமுத்தானி த்யஜஸ்வ வ்யஸனானி ச.

(தசரதர் ராமரிடம்) நீ குணவானாக இருந்தாலும் உன்னிடமுள்ள பிரியத்தினால் உனக்கு நன்மையைச் சொல்கிறேன். அடக்கத்தைத் தொடர்ந்து கடைப்பிடித்து, புலன்களை எப்போதும் வென்று, ஆசை, கோபம் ஆகியவற்றால் விளையும் உளைச்சல்களைத் தவிர்ப்பாயாக.

41.

किन्तु चित्तं मनुष्याणामनित्यमिति मे मतिः।
सतां च धर्मनित्यानां कृतशोभि च राघव।।2.4.27।।

கிந்து சித்தம் மநுஷ்யாணாமநித்யமிதி மே மதி:
ஸதாம்ச தர்மநித்யாநாம் க்ருதஶோபிச ராகவ!।।2.4.27।।

ராகவா! சான்றோர்கள் மற்றும் தர்மத்தையே பற்றி ஒழுகும் மனிதர்களுடைய மனம்கூட பல காரணங்களால் விருப்பு-வெறுப்பை அடைகிறது. சஞ்சலமில்லாமல் எப்போதும் உறுதியாக இருப்பதில்லை என்ற விஷயம் எல்லோரும் அறிந்ததுதானே?

42.

गतोदके सेतुबन्धो न कल्याणि विधीयते ।

(2.9.54)

கதோதகே ஸேதுபந்தோ ந கல்யாணி
விதீயதே. (2.9.54)

கல்யாணியே, நதியின் நீர் வெளியேறியபின்
அணை கட்டுவது செல்லாது.

43.

सत्येन लोकान् जयति दीनान् दानेन राघवः।
गुरूञ्छुश्रूषया वीरो धनुषा युधि शात्रवान्।।2.12.29।।

ஸத்யேந லோகாந் ஜயதி தீநாந் தாநேந ராகவ:..
குரூஞ்சுஶ்ரூஷயா வீரோ தநுஷா யுதி
ஶாத்ரவாந்।।2.12.29।।

ராமர் உலக மக்களை உண்மையினாலும்,
வறியவர்களைக் கொடையினாலும், ஆசார்யர்களைப்
பணிவிடையாலும், யுத்தத்தில் விரோதிகளை வில்
திறனாலும் வெற்றி கொள்கிறார்.

44.

सत्यं दानं तपस्त्यागो मित्रता शौचमार्जवम्।
विद्या च गुरुशुश्रूषा ध्रुवाण्येतानि राघवे।।2.12.30।।

ஸத்யம் தானம் தபஸ் த்யாகோ மித்ரதா
செளசமார்ஜவம்.
வித்யாச குருசுஶ்ரூஷா த்ருவாண்யேதாநி
ராகவே।।2.12.30।।

ராமனிடம் சத்தியம், தானம், தவம், தியாகம், நட்பு, தூய்மை, நேர்மை, கல்வி, பெரியோருக்குப் பணிவிடை முதலிய நற்குணங்கள் நிலைகொண்டிருந்தன.

45.

यथा ह्यपालाः पशवो यथा सेना ह्यनायका ।
यथा चन्द्रं विना रात्रिर्यथा गावो विना वृषम्।
एवं हि भविता राष्ट्रं यत्र राजा न दृश्यते।।2.14.57।।

யதா ஹ்யபாலா: பசவோ யதா ஸேனா ஹ்யநாயகா.
யதா சந்த்ரம் விநா ராத்ரிர் யதா காவோ விநா வ்ருஷம்.
ஏவம்ஹி பவிதா ராஷ்ட்ரம் யத்ர ராஜா ந த்ருஶ்யதே।।2.14.57।।

இடையர்கள் இல்லாத பசுமந்தைகள், தலைவனில்லாத போர்ப்படை, சந்திரன் இல்லாத இரவு, காளை இல்லாத பசுக்கூட்டம் எப்படியோ, அப்படியே மன்னன் இல்லாத நாடானது நல்ல நிர்வாகம் இல்லாமை, ஒளியின்மை, கலவரம் நிறைந்ததாக ஆகிவிடும்.

46.

अहं हि वचनाद् राज्ञ: पतेयमपि पावके ।
भक्षयेयं विषं तीक्ष्णं मज्जेयमपि चार्णवे।
नियुक्तो गुरुणा पित्रा नृपेण च हितेन च।।2.18.29।।

அஹம் ஹி வசனாத் ராக்ஞ: பதேயமபி பாவகே.
பக்ஷயேயம் விஷம் தீக்ஷ்ணம் மஜ்ஜேயமபி சார்ணவே.
நியுக்தோ குருணா பித்ரா ந்ருபேணச ஹிதேநச।।2.18.29।।

(ராமர் கைகேயியிடம்) ராஜாவின் ஆக்ஞையினால் அக்னியில் குதிப்பேன். கொடிய விஷத்தையும் குடிப்பேன்; கடலில் மூழ்குவேன்; என் நலன் விரும்புகிற இவர்தான் என்னுடைய குரு, தந்தை, மன்னர். அவரால் ஆணையிடப்பட்டால் நான் எதைத்தான் செய்யமாட்டேன்.

47.

तद्ब्रूहि वचनं देवि राज्ञो यदभिकाङ्क्षितम्।
करिष्ये प्रतिजाने च रामो द्विर्नाभिभाषते।।2.18.30।।

தத்ப்ரூஹி வசநம் தேவி ராஜ்ஞோ யதபிகாங்க்ஷிதம்.
கரிஷ்யே ப்ரதிஜாநேச ராமோ த்விர்நாபிபாஷதே।।2.18.30।।

ஆகவே அரசியே! மன்னரின் விருப்பம் எதுவோ அதைத் தெரிவியுங்கள், அதை கட்டாயம் செய்வேன் என்று உறுதி கூறுகிறேன். ராமனாகிய நான் முதலில் ஒன்றைக் கூறிவிட்டு, பின்னர் அதை மாற்றிப் பேசுபவன் அல்லன்.

48.

न ह्यतो धर्मचरणं किञ्चिदस्ति महत्तरम्।
यथा पितरिशुश्रूषा तस्य वा वचनक्रिया।।2.19.22।।

நஹ்யதோ தர்மசரணம் கிஞ்சிதஸ்தி மஹத்தரம்.
யதா பிதரி சுஶ்ரூஷா தஸ்யவா வசநக்ரியா।।2.19.22।।

ஏனென்றால், தந்தைக்கு பணிவிடை செய்வது, மற்றும் அவர் சொற்படி நடப்பது என்பதைக் காட்டிலும் மேலான தர்மானுஷ்டானம் இல்லை.

49.

न नूनं मयि कैकेयि किञ्चिदाशंससे गुणम्।
यद्राजानमवोचस्त्वं ममेश्वरतरा सती।।2.19.24।।

நநூநம் மயி கைகேயி கிஞ்சிதாசம்ஸஸே குணம்.
யத்ராஜாநமவோசஸ்த்வம் மமேஶ்வரதராஸதீ।।2.19.24।।

தேவியே! தாங்கள் எனக்கு ஈஸ்வரனைவிட உயர்ந்த தாயார்; தாங்களும் எனக்குக் கட்டளையிட முழு உரிமை பெற்றவர். தாங்கள் என்னிடம் நல்ல குணம் ஏதொன்றுமே இருப்பதாகக் கொள்ளவில்லை. அதனால் இது விஷயமாக மன்னரிடம் கேட்டிருக்கிறீர்கள்.

50.

धर्मो हि परमो लोके धर्मे सत्यं प्रतिष्ठितम्।
धर्मसंश्रितमेतच्च पितुर्वचनमुत्तमम्।।2.21.40।।

தர்மோஹி பரமோலோகே தர்மே ஸத்யம்ப்ரதிஷ்டிதம்.
தர்மஸம்ஶ்ரிதமேதச்ச பிதுர்வசநமுத்தமம்।।2.21.40।।

தர்மம் தான் உலகில் எல்லாவற்றைக்காட்டிலும் மிக உயர்வானது. தருமத்தில் சத்தியம் (வாக்குத் தவறாமை) நிலைபெற்றிருக்கிறது. தந்தையின் இந்த ஆணையும் தர்மம் சார்ந்திருப்பதால் உத்தமமானதே.

51.

संश्रुत्य च पितुर्वाक्यं मातुर्वा ब्राह्मणस्य वा।
न कर्तव्यं वृथा वीर धर्ममाश्रित्य तिष्ठता।।2.21.41।।

ஸம்ஶ்ருத்யச பிதுர்வாக்யம் மாதுர்வா
ப்ராஹ்மணஸ்யவா.
ந கர்தவ்யம் வ்ருதாவீர தர்மமாஶ்ரித்ய
திஷ்டதா।।2.21.41।।

அறத்தையே வாழ்க்கை நெறியாகக் கொண்டுள்ள ஒருவன் தன் தந்தை, தாய், அல்லது அந்தணனுக்கு வாக்குக் கொடுத்துவிட்டு, அதை நடத்தாமல் வீணாக்குவது என்பது செய்யத்தகாதது.

52.

धर्मार्थकामाः खलु तात लोके समीक्षिता धर्मफलोदयेषु।
ते तत्र सर्वे स्युरसंशयं मे भार्येव वश्याऽभिमता सपुत्रा।।2.21.56।।

தர்மார்த்தகாமா: கலு தாத லோகே ஸமீக்ஷிதா தர்மபலோதயேஷு.
தே தத்ர ஸர்வே ஸ்யுரஸம்ஶயம் மே பார்யேவ வஶ்யாபிமதா ஸபுத்ரா।।2.21.56।।

முன்பு செய்த தர்மமானது இந்தப் பிறவியில் பயன் கொடுக்கத் தொடங்கும்போது தர்மம், அர்த்தம், காமம் என்ற மூன்றும் நேரிடையாகவே காணப்படுகின்றன. எப்படியென்றால், பத்தினி என்ற ஒருத்தியின் மூலமே தர்ம-அர்த்த-காமங்கள் நிறைவேறுகின்றனவல்லவா. மனைவி, கணவன் இயற்றும் விருந்தினர் உபசரிப்பு போன்ற அறச்செயல்களில் துணை நிற்கிறாள். அவனுடைய காமத்துக்கு ஈடு கொடுக்கிறாள், நன்மகனை பெற்றுக் கொடுத்து, கணவன் புண்ணியமான மேலுலகங்களை அடையவும் உதவுகிறாள். (பத்தினி இருந்தால் மற்ற மூன்றும் கிடைக்கும். தர்மம் அனுஷ்டிக்கப்படால் மற்றவை தாமே வந்து சேரும்.) இதில் ஐயமில்லை.

53.

यस्मिंस्तु सर्वे स्युरसन्निविष्टा धर्मो यत स्स्यात्तदुपक्रमेत।
द्वेष्यो भवत्यर्थपरो हि लोके कामात्मता खल्वपि न प्रशस्ता।।2.21.57।।

யஸ்மிம்ஸ்து ஸர்வேஸ்யுரஸந்நிவிஷ்டா தர்மோயதஸ் ஸ்யாத்ததுபக்ரமேத.
த்வேஷ்யோ பவத்யர்தபரோஹி லோகே காமாத்மதா கல்வபி ந ப்ரஶஸ்தா।।2.21.57।

எந்த ஒரு செயலில் நான்கு புருஷார்த்தங்களும் சேர்ந்திருக்கவில்லையோ அந்தக் கர்மாவை செய்யக் கூடாது. எந்த ஒரு கர்மாவினால் தருமம் அடையப்படுகிறதோ அதையே ஆரம்பித்து நடத்த வேண்டும். வெறும் பொருளாசை கொண்டவன் உலகத்தினரால் வெறுக்கப்படுகிறான். காமத்தில் அதிக ஈடுபாடும் போற்றத்தக்கதல்ல.

54.

भर्तुः किल परित्यागो नृशंसः केवलं स्त्रियाः।
स भवत्या न कर्तव्यो मनसाऽपि विगर्हितः।।2.24.12।।

பர்து:கில பரித்யாகோ ந்ருசம்ஸ: கேவலம் ஸ்த்ரியா:.
ஸ பவத்யா ந கர்தவ்யோ மநஸாபி விகர்ஹித:।।2.24.12।।

(ராமர் கௌஸல்யையிடம்) கொண்ட கணவரைத் துறப்பது (கைவிடப்படுவதும்) என்பது பெண்களின் மிக குரூரமான செயல். இது மிகவும் இகழத்தக்கது. ஆகவே தங்களால் ஒருபோதும் மனத்தால்கூட சிந்திக்கதகாதது.

55.

मया चैव भवत्या च कर्तव्यं वचनं पितुः।
राजा भर्ता गुरुश्श्रेष्ठस्सर्वेषामीश्वरः प्रभुः।।2.24.16।।

மயாசைவ பவத்யா ச கர்தவ்யம் வசநம் பிது.
ராஜா பர்தாகுருஶ்ரேஷ்டஸ்
ஸர்வேஷாமீஶ்வர:ப்ரபு:।।2.24.16।।

என் தந்தையார் இந்நாட்டு மன்னர், நம்மை போஷிப்பவர், நல்லுபதேசம் செய்யும் ஆசார்யர், உத்தமர், எல்லோருக்கும் தலைவர், முழு அதிகாரம் உடையவர், அவருடைய கட்டளை எதுவானாலும் என்னாலும் தங்களாலும் நிறைவேற்றப்படவேண்டும்.

56.

व्रतोपवासनिरता या नारी परमोत्तमा।
भर्तारं नानुवर्तेत सा तु पापगतिर्भवेत्।।2.24.25।।

வ்ரதோபவாஸநிரதா யா நாரீ பரமோத்தமா.
பர்தாரம் நாநுவர்தேத ஸா து பாபகதிர்பவேத்।।2.24.25।।

விரத-உபவாஸங்களை முறையாக அனுஷ்டித்துக் கொண்டிருக்கும் ஓர் நாரீமணி, உத்தமமான குணங்களைக் கொண்டிருந்தாலும், கணவருக்கு இசைவாக நடக்கவில்லை என்றால், அவள் பாவிகள் போய்ச்சேரும் இடத்தையே அடைவாள்.

57.

भर्तु श्शुश्रूषया नारी लभते स्वर्गमुत्तमम्।
अपि या निर्नमस्कारा निवृत्ता देवपूजनात्।।2.24.26।।

பர்துசுஶ்ரூஷயா நாரீ லபதே ஸ்வர்கமுத்தமம்.
அபி யா நிர்நமஸ்காரா நிவ்ருத்தா தேவபூஜநாத்।।2.24.26।।

வேறு எந்த தெய்வத்தையும் வணங்காது தேவபூஜை செய்யாத பெண்மணி கணவருக்குப் பணிவிடை செய்வதாலேயே உயர்ந்த புண்ணிய உலகங்களைப் பெறுகிறாள்.

58.

शुश्रूषामेव कुर्वीत भर्तुः प्रियहिते रता।
एष धर्मः पुरा दृष्टो लोके वेदे श्रुतः स्मृतः।।2.24.27।।

சுஶ்ரூஷாமேவ குர்வீத பர்து:ப்ரியஹிதே ரதா.
ஏஷ தர்ம: புரா த்ருஷ்டோ லோகே வேதே ஶ்ருத:
ஸ்ம்ருத:।।2.24.27।।

(பெண்கள்) கணவருக்கு இஷ்டம்-அனுகூலமானவற்றில் ஈடுபட்டு எப்போதும் பணிவிடை செய்ய வேண்டும். இந்த தர்மம்தான் பண்டைய காலத்திலிருந்து உலக வழக்கமாக இருந்து வருகிறது: வேதங்களிலும் ஸ்ம்ருதிகளிலும் பாராட்டப் பெற்றுள்ளது.

59.

यं पालयसि धर्मं त्वं धृत्या च नियमेन च।
स वै राघवशार्दूल धर्मस्त्वामभिरक्षतु।।2.25.3।।

யம் பாலயஸி தர்மம்த்வம் த்ருத்யாச நியமேநச.
ஸ வை ராகவஶார்தூல தர்மஸ்த்வாமபிரக்ஷது।।2.25.3।।

(கௌஸல்யை ராமரிடம்) எந்த ஒரு தர்மத்தை தைரியத்துடனும் சலிப்படையாமலும் நீ கடைப்பிடித்து வருகிறாயோ, ரகுகுலத்துப் புலி போன்றவனே! அந்த தர்மம் உன்னைப் பாதுகாக்கக் கடவது.

60.

ऋद्धियुक्ता हि पुरुषा न सहन्ते परस्तवम्।
तस्मान्न ते गुणाः कथ्या भरतस्याग्रतो मम।।2.26.25।।

ருத்தியுக்தாஹி புருஷா ந ஸஹந்தே பரஸ்தவம்.
தஸ்மாந்ந தே குணா: கத்யா பரதஸ்யாக்ரதோ மம
।।2.26.25।।

(ராமர் ஸீதையிடம்) மகத்தான செல்வச் செழிப்போடு விளங்கும் ஆண்கள் பிறரைப் பற்றி உயர்வாகப் பேசப்படுவதை சகித்துக் கொள்ள மாட்டார்கள். அதனால் பரதன் முன்னிலையில் என்னுடைய குணங்களை வாழ்த்திப் பேசாதிருக்க வேண்டும்.

61.

आराधिता हि शीलेन प्रयत्नैश्चोपसेविताः।
राजानस्सम्प्रसीदन्ति कुप्यन्तिच विपर्यये।।2.26.35।।

ஆராதிதா ஹி சீலேந ப்ரயத்நைஶ்சோபஸேவிதா:.
ராஜாந ஸம்ப்ரஸீதந்தி குப்யந்திச விபர்யயே।।2.26.35।।

அவர்களுக்குப் பிடித்தமான முறையில் நடந்து கொள்வதாலும், மிகுந்த கவனத்துடன் சேவை செய்வதாலும் அரசர்கள் திருப்தி அடைகிறார்கள். நேர் மாறாக நடந்து கொண்டால் கோபம் கொள்கிறார்கள்.

62.

न पिता नात्मजो नात्मा न माता न सखीजनः।
इह प्रेत्य च नारीणां पतिरेको गतिस्सदा।।2.27.5।।

ந பிதா நாத்மஜோ நாத்மா ந மாதா ந ஸகீஜந:.
இஹ ப்ரேத்யச நாரீணாம் பதிரேகோ
கதிஸ்ஸதா।।2.27.5।।

(ஸீதை ராமரிடம்) இவ்வுலகிலும் மறுவுலகிலும் தந்தையோ, புத்திரனோ, தெய்வமோ, தாயாரோ, தோழிகளோ உதவ மாட்டார்கள். பெண்களுக்கு கணவர்தான் ஒரே கதி (போக்கிடம்).

63.

इहलोके च पितृभिर्या स्त्री यस्य महामते।
अद्भिर्दत्ता स्वधर्मेण प्रेत्यभावेऽपि तस्य सा।।2.29.18।।

இஹலோகேச பித்ருபிர்யா ஸ்த்ரீ யஸ்ய மஹாமதே!.
அத்பிர்தத்தா ஸ்வதர்மேண ப்ரேத்யபாவேபி தஸ்ய
ஸா।।2.29.18।।

இவ்வுலகில் ஒரு பெண் பெற்றோர்களால் தன் குல ஆசாரப்படி எவருக்குத் தாரை வார்த்துக் கொடுக்கப்பட்டாளோ, அவள் உயிர் நீங்கிய பின்னரும் அவனுடையவளே.

64.

द्युमत्सेनसुतं वीर सत्यवन्तमनुव्रताम्।
सावित्रीमिव मां विद्धि त्वमात्मवशवर्तिनीम्।।2.30.6।।

த்யுமத்ஸேநஸுதம் வீர ஸத்யவந்தமநுவ்ரதாம்.
ஸாவித்ரீமிவ மாம் வித்தி
த்வமாத்மவஶவர்திநீம்।।2.30.6।।

வீரரே! த்யுமத்சேனருடைய குமாரன் சத்தியவானை அடியொற்றிச் சென்ற சாவித்திரியைப் போல, தங்களுக்கு அடிமைப்பட்டுக் கிடப்பவள் நான் என்பதை அறிந்து கொள்ளுங்கள்.

65.

अस्वाधीनं कथं दैवं प्रकारैरभिराध्यते।
स्वाधीनं समतिक्रम्य मातरं पितरं गुरुम्।।2.30.33।।

அஸ்வாதீநம் கதம் தைவம் ப்ரகாரைரபிராத்யதே.
ஸ்வாதீநம் ஸமதிக்ரம்ய மாதரம் பிதரம் குரும்।।2.30.33।।

(ராமர் ஸீதையிடம்) கண்ணுக்குத் தெரிகிற தாய், தந்தை, குரு ஆகியோரை மீறி (அவர்களுடைய கட்டளைக்குக் கட்டுப்படாமல்) கண்ணுக்குப் புலனாகாத ஒரு தெய்வத்தை பலவிதமாக ஆராதித்து என்ன பயன்.

66.

यत्त्रयं तत्त्रयो लोकाः पवित्रं तत्समं भुवि।
नान्यदस्ति शुभापाङ्गे तेनेदमभिराध्यते।।2.30.34।।

யத்த்ரயம் தத்த்ரயோ லோகா: பவித்ரம் தத்ஸமம்புவி.
நாந்யதஸ்தி சுபாபாங்கே தேநேதமபிராத்யதே।।2.30.34।।

நற்றடங்கண்ணாளே, எந்த ஒரு தர்மத்தைக் கடைப்பிடிப்பதால் தர்மார்த்த காமங்கள் ஒருங்கே கிடைக்குமோ, மூன்று உலகங்களும் பூஜிக்கப்பட்டதாக ஆகுமோ, தாய்-தந்தை-குரு என்கிற மூன்றைத் தவிர வேறொரு புண்ணிய மூர்த்தி இந்த பூமண்டலத்தில் இல்லை. அதனால்தான் இம்மூவரும் மக்களால் ஆராதிக்கப்படுகிறார்கள்.

67.

न सत्यं दानमानौ वा न यज्ञाश्चाप्तदक्षिणाः।
तथा बलकरास्सीते यथा सेवा पितुर्हिता।।2.30.35।।

ந ஸத்யம் தாநமாநௌவா ந யஜ்ஞாஶ்சாப்ததக்ஷிணா:.
ததா பலகராஸ்ஸீதே யதா ஸேவா பிதுர்ஹிதா।।2.30.35।।

சீதே! தந்தையின் விருப்பப்படி சேவை செய்வதால் எவ்வளவு புண்ணியம் கிடைக்குமோ, அவ்வளவு புண்ணியத்தை சத்தியம் பேசுவது, கொடை வழங்குவது, பெருமை பெறுவது ஏராளமான தட்சிணை கொடுத்து யாகங்கள் செய்வது - இவற்றிற்குக் கொடுக்க சக்தியில்லை.

68.

स्वर्गो धनं वा धान्यं वा विद्याः पुत्रास्सुखानि च।
गुरुवृत्त्यनुरोधेन न किञ्चिदपि दुर्लभम्।।2.30.36।।

ஸ்வர்கோ தநம்வா தாந்யம்வா
வித்யா:புத்ராஸ்ஸுகாநிச.
குருவ்ருத்த்யநுரோதேந ந கிஞ்சிதபி துர்லபம்।।2.30.36।।

குருமார்களுக்கு (தாய்-தந்தை-குரு) பணிவிடை செய்வதையே கடமையாகக் கொண்டவனுக்கு சுவர்க்கம், செல்வம், தானியம், ஞானம், புதல்வர்கள், சௌகரியங்கள் இவையெல்லம் அடைய முடியாதனவல்ல.

69.

देवगन्धर्वगोलोकान्ब्रह्मलोकांस्तथाऽपरान्।
प्राप्नुवन्ति महात्मानो मातापितृपरायणाः।।2.30.37।।

தேவகந்தர்வகோலோகாந் ப்ரஹ்மலோகாம்ஸ்ததாபராந்.
ப்ராப்நுவந்தி மஹாத்மாநோ
மாதாபித்ருபராயணா:।।2.30.37।।

தாய்-தந்தையருக்குப் பக்தியுடன் பணிவிடை செயவதையே ஒரே கடமையாகக் கொண்ட உத்தம மனிதர்கள் தேவ-கந்தர்வ-கோலோக-பிரும்மலோகம் ஆகியவற்றை, மற்றும் இதர புண்ணியலோகங்களை அடைகிறார்கள்.

70.

आनृशंस्यमनुक्रोशः श्रुतं शीलं दमश्शमः।
राघवं शोभयन्त्येते षड्गुणाः पुरुषोत्तमम्।।2.33.12।।

ஆந்ருசம்ஸ்யமநுக்ரோஶ: ஶ்ருதம்ஶீலம் தமஶ்ஶம:.
ராகவம் ஶோபயந்த்யேதே ஷட்குணா:
புருஶோத்தமம்।।2.33.12।।

(ஜனங்கள் சொன்னது) பிறருக்கு உடற்கேடு மற்றும் மனக்கேடு விளைவிக்காமை, இரக்கம், அறநூல் ஞானம், நல்லொழுக்கம், புலனடக்கம், மனவடக்கம் என்று ஆறு குணங்களும் உத்தம புருஷனாகிய ராமனுக்கு அணிகலன்களாகத் திகழ்கின்றன.

71.

मूलं ह्येष मनुष्याणां धर्मसारो महाद्युतिः।
पुष्पं फलं च पत्रं च शाखाश्चास्येतरे जनाः।।2.33.15।।

மூலம் ஹ்யேஷ மநுஷ்யாணாம் தர்மஸாரோ
மஹாத்யுதி:.
புஷ்பம் பலம்ச பத்ரம்ச ஶாகாஶ்சாஸ்யேதரே
ஜநா:।।2.33.15।।

அறத்தைப் பிழிந்தெடுத்த சாறு போன்றவரும், தெய்வீக மகிமை பொருந்தியவருமான இந்த ஸ்ரீராமன், மனித குலத்தின் ஆதாரஸ்தானம் வேர் போன்றவர். ஏனைய மக்கள் எல்லோரும் பூ, பழம், இலை, கிளைகள்.

72.

यन्महेन्द्रमिवाजय्यं दुष्प्रकम्प्यमिवाचलम्।
महोदधिमिवाक्षोभ्यं सन्तापयसि कर्मभिः।।2.35.7।।

யன்மஹேந்த்ரமிவாஜய்யம் துஷ்ப்ரகம்ப்யமிவாசலம்.
மஹோததிமிவாக்ஷோப்யம் ஸந்தாபயஸி கர்மபி:।।2.35.7।।

(சுமந்திரர் கைகேயியிடம்) எவர் (தசரதர்) தேவராஜனான இந்திரனைப்போல் எவராலும் வெல்ல முடியாதவரோ, மலையைப் போல் அசைக்க முடியாதவரோ, மாபெருங்கடலைப் போல் கலக்க முடியாதவரோ, அவரை (இது போன்ற) தீய நடவடிக்கைகளால் மனவேதனைப்படச் செய்துவிட்டாய்.

73.

आम्रं छित्वा कुठारेण निम्बं परिचरेत्तु यः।
यश्चैनं पयसा सिञ्चेन्नैवास्य मधुरो भवेत्।।2.35.16।।

ஆம்ரம் சித்வா குடாரேண நிம்பம் பரிசரேத்து ய:.
யஶ்சைநம் பயஸா ஸிஞ்சேந்நைவாஸ்ய
மதுரோபவேத்।।2.35.16।।

கோடாரியால் மாமரத்தை வெட்டிவிட்டு, அந்த இடத்தில் வேப்ப மரத்தை நட்டு பால் ஊற்றி வளர்த்தாலும், அது என்ன இனிப்பாகவா மாறப் போகிறது?

74.

यो हि दत्त्वा द्विपश्रेष्ठं कक्ष्यायां कुरुते मनः।
रज्जुस्नेहेन किं तस्य त्यजतः कुञ्जरोत्तमम्।।2.37.3।।

யோ ஹி தத்வா த்விபஶ்ரேஷ்டம் கக்ஷ்யாயாம் குருதே மந:.
ரஜ்ஜுஸ்நேஹேந கிம் தஸ்ய த்யஜத:
குஞ்ஜரோத்தமம்।।2.37.3।।

உத்தமமான யானையை (தானமாக) கொடுத்துவிட்டவன், அதை பிணைக்கும் கயிற்றின்மேல் ஆசை வைப்பானா? (கயிற்றை மட்டும் தன்னிடமே வைத்துக்கொள்ள ஆசைப்படுவானா?) யானையையே துறந்துவிட்ட அவனுக்கு அந்தக் கயிற்றினால் என்ன பிரயோஜனம்?

75.

असत्यस्सर्वलोकेऽस्मिन्सततं सत्कृताः प्रियैः।
भर्तारं नानुमन्यन्ते विनिपातगतं स्त्रियः।।2.39.20।।

அஸத்யஸ் ஸர்வலோகேऽஸ்மிந் ஸததம் ஸத்க்ருதா:
ப்ரியை:.
பர்தாரம் நாநுமந்யந்தே விநிபாதகதம் ஸ்த்ரிய:।।2.39.20।।

கணவர்களால் மேன்மையாக நடத்தப்பட்டாலும், பெண்கள் ஏதோ காரணத்தால் வறுமை நிலைக்கு தள்ளப்பட்ட தத்தம் கணவரிடம் மரியாதை செலுத்துவதில்லை யென்றால், இவ்வுலகில் நடத்தை கெட்டவர்களாகக் கருதப்படுகிறார்கள்.

## 76.

असत्यशीला विकृता दुर्ग्राह्यहृदयास्सदा।
युवत्यः पापसंङ्कल्पाः क्षणमात्राद्विरागिणः।।2.39.22।।

அஸத்யசீலா விக்ருதா துர்க்ராஹ்யஹ்ருதயாஸ் ஸதா.
யுவத்ய: பாபஸங்கல்பா: க்ஷணமாத்ராத்விராகிண:।।2.39.22।।

சில துஷ்டப் பெண்கள் பொய்யான நடத்தையுடையவர்கள்; காமம், கோபம் போன்ற மனோவிகாரங்களுக்கு இடம் கொடுப்பவர்கள்; கடுமையானவர்கள்; இதயமே இல்லாதவர்கள் போல யாரிடமும் ஒருபோதும் கருணை காட்டாதவர்கள்; கீழான சிந்தனைகளிலேயே உழல்பவர்கள்; நொடிப்பொழுதில் (பின்னர் ஏற்படும் விளைவுகள் கருதாமல்) கணவருடன் உறவைத் துண்டித்து விடுவார்கள்.

## 77.

साध्वीनां हि स्थितानां तु शीले सत्ये श्रुते शमे।
स्त्रीणां पवित्रं परमं पतिरेको विशिष्यते।।2.39.24।।

ஸாத்வீநாம் ஹி ஸ்திதாநாம் து ஶீலே ஸத்யே ஶ்ருதே ஶமே.
ஸ்த்ரீணாம் பவித்ரம் பரமம் பதிரேகோ விசிஷ்யதே।।2.39.24।।

இதற்கு மாறாக சிறந்த நாரீமணிகளிடம் நன்னடத்தை, சத்தியம், சாஸ்திர நம்பிக்கை, மனவடக்கம் முதலியவைகளில் மனம் நிலைத்திருக்கும் பெண்களுக்கு மிக உயர்ந்த தர்மானுஷ்டானமாக கணவர்தான் சிறப்பாக குறிப்பிடப்பட்டுள்ளார்.

78.

नातन्त्री वाद्यते वीणा नाचक्रो वर्तते रथः।
नापतिस्सुखमेधेत या स्यादपि शतात्मजा।।2.39.29।।

நாதந்த்ரீ வாத்யதேவீணா நாசக்ரோ வர்ததேரத:.
நாபதிஸ்ஸுகமேதேத யா ஸ்யாதபி
ஶதாத்மஜா।।2.39.29।।

தந்தியில்லாத வீணையை வாசிக்க முடியாது, சக்கரம் இல்லாத தேர் ஓடாது; அதுபோல் ஒரு பெண் ஏராளமான மக்கட்செலவத்தைப் பெற்றவளாக இருந்தாலும் கணவர் அருகில் இல்லாவிட்டால் சுகத்தை அடையமாட்டாள்.

79.

मितं ददाति हि पिता मितं माता मितं सुतः।
अमितस्य हि दातारं भर्तारं का न पूजयेत्।।2.39.30।।

மிதம் ததாதிஹி பிதா மிதம் மாதா மிதம் ஸுத:.
அமிதஸ்யஹி தாதாரம் பர்தாரம் கா ந பூஜயேத்।।2.39.30।।

தந்தை தாய் மகன் இவர்கள் பெண்கள் சுகமாக இருப்பதற்கு ஓர் அளவுக்குத்தான் உதவியாக இருக்க முடியும். எல்லையில்லாத அளவு சுகம் (இகலோகத்தில் உலகாயத இன்பங்களையும், பரலோகத்தில் புண்ணியப் பயனான போகங்களையும்) கொடுக்கக் கூடிய கணவரை யார்தான் பூஜிக்காமல் இருப்பார்கள்?

## 80.

रामं दशरथं विद्धि मां विद्धि जनकात्मजाम्।
अयोध्यामटवीं विध्दि गच्छ तात यथासुखम्।।2.40.9।।

ராமம் தஶரதம் வித்தி மாம் வித்தி ஜநகாத்மஜாம்.
அயோத்யாமடவீம் வித்தி கச்ச தாத யதாஸுகம்।।2.40.9।।

(ஸுமித்திரை லக்ஷ்மணனிடம்) "குழந்தாய், ராமனை தசரதராக எண்ணிக் கொள். *சீதையை* நானாக (தாயாராக) எண்ணிக் கொள். அரண்யத்தை அயோத்தியாக எண்ணிக் கொள். சரி, சௌக்கியமாகச் சென்று வா."

## 81.

हत्वेव ब्राह्मणं कामात् स्पृष्ट्वाग्निमिव पाणिना।
अन्वतप्यत धर्मात्मा पुत्रं सञ्चिन्त्य तापसम् ।।2.42.11।।

ஹத்வேவ ப்ராஹ்மணம் காமாத் ஸ்ப்ருஷ்ட்வாக்நிமிவ பாணிநா.
அந்வதப்யத தர்மாத்மா புத்ரம் ஸஞ்சிந்த்ய தாபஸம்।।2.42.11।।

பிரும்மஹத்தி பாவம் வந்துவிடும் என்று தெரிந்தும் மனமொப்பி ஓர் அந்தணரைக் கொன்றுவிட்டவன்; ஜ்வாலைவிட்டு எரிந்துகொண்டிருக்கிற நெருப்பை தன் கையால் தொட்டுவிட்டவன்; இவ்விருவரும் செயலுக்குப்பின் வருந்துவதைப் போல் தர்மாத்மாவான மன்னர் தவசி தோற்றம் ஏற்றுச் செல்லும் திருக்குமாரனை எண்ணி மனம் பரிதவித்தார்.

82. द्विजातींस्तु पदातींस्तान् रामश्चारित्रवत्सलः।
न शशाक घृणाचक्षुः परिमोक्तुं रथेन सः।।2.45.19।।

த்விஜாதீம்ஸ்து பதாதீம்ஸ்தாந் ராமஶ்சாரித்ரவத்ஸல:.
ந ஶஶாக க்ருணாசக்ஷு: பரிமோக்தும் ரதேந
ஸ:।।2.45.19।।

நல்லொழுக்கத்தைத் தவறாது கடைப்பிடிக்கும் ராமன், கால்நடையாக வந்து கொண்டிருந்த அந்தணர்கள்மேல் தயை கொண்டு தானும் காலால் நடக்கத் தொடங்கினார். தான் ரதத்தில் ஏறிச் சென்று, அவர்களைப் பின்னால் நிறுத்திவிடும் அடாத செயலைச் செய்ய சக்தியற்றவரானார்.

83.
त्वं हि त्रिपथगे देवि ब्रह्मलोकं समक्षसे ।
भार्या चोदधिराजस्य लोकेऽस्मिन् संप्रदृश्यसे ॥ (2.52.86)

த்வம் ஹி த்ரிபதகே தேவி ப்ரம்மலோகம் ஸமக்ஷஸே.
பார்யா சோததிராஜஸ்ய லோகேஸ்மின் ஸம்ப்ரத்ருஶ்யஸே.
(2.52.86)

(ஸீதை கங்கையிடம் பிரார்த்தனை) தேவியே, நீ ஸ்வர்கம், பூலோகம், பாதாளம் ஆகிய மூன்று பாதைகளில் பரவியுள்ளாய். பிரம்மலோகம் வரையில் பரவி, இப்பூவுலகில் ஸமுத்திரராஜனுடைய பத்தினியாக காணப்படுகிறாய்.

84.

गवां शतसहस्रं च वस्त्राण्यन्नं च पेशलम् ।
ब्राह्मणेभ्यः प्रदास्यामि तव प्रियचिकीर्षया ॥ (2.52.88)

கவாம் ஶதஸஹஸ்ரம் ச வஸ்த்ராண்யன்னம் ச பேசலம்.
ப்ராம்மணேப்ய: ப்ரதாஸ்யாமி தவ ப்ரியசிகீர்ஷயா. (2.52.88)

(நான் ராமருடன் நலமாகத் திரும்பி வருகையில்) தங்களுக்கு ப்ரியத்தை உண்டுபண்ணுவதற்காக, நான் பிராம்மணர்களுக்கு ஒரு லக்ஷம் பசுக்களும், நிறைய வஸ்திரங்களும், உயர்ந்த அன்னமும் தானம் செய்கிறேன்.

85.

यावता चित्रकूटस्य नरश्शृङ्गान्यवेक्षते।
कल्याणानि समाधत्ते न पापे कुरुते मनः।।2.54.30।।

யாவதா சித்ரகூடஸ்ய நரஶ்ரிங்காந்யவேக்ஷதே.
கல்யாணாநி ஸமாதத்தே ந பாபே குருதே மந:।।2.54.30।।

ஒரு மனிதன் சித்திரகூடத்தின் சிகரங்களை பார்த்துவிட்டால் போதும். அதுமுதல் ஏராளமான நற்பேறுகளை அடைகிறான். அவனுடைய மனம் பாவத்தின் பக்கம் செல்வதில்லை.

86.

गतिरेका पतिर्नार्या द्वितीया गतिरात्मजः।
तृतीया ज्ञातयो राजंश्चतुर्थी नेह विद्यते।।2.61.27।।

கதிரேகா பதிர்நார்யா த்விதீயா கதிராத்மஜ:.
த்ருதீயா ஜ்ஞாதயோ ராஜம்ஸ்சதுர்தீ
நேஹவித்யதே।।2.61.27।।

மன்னரே! ஒரு பெண்ணிற்கு முதன்மையான கதி அவளுடைய கணவன்; இரண்டாவதாக மகன், மூன்றாவதாக உறவினர்கள்; நான்காவதாக எதுமே இந்த உலகில் இல்லை.

87.

भर्ता तु खलु नारीणां गुणवान्निर्गुणोऽपि वा।
धर्मं विमृशमानानां प्रत्यक्षं देवि दैवतम्।।2.62.8।।

பர்தா து கலு நாரீணாம் குணவாந்நிர்குணோபிவா.
தர்மம் விம்ருஶமாநாநாம் ப்ரத்யக்ஷம் தேவி
தைவதம்।।2.62.8।।

தேவி! தர்மத்தைப் பற்றி ஆராயும் பெண்களுக்கு கணவன்தான் - அவன் நற்குணம் பெற்றவனாயினும் சரி - துர்குணம் பெற்றவனாயினும் சரி - கண்கண்ட தெய்வம்.

88.

शोको नाशयते धैर्यं शोको नाशयते श्रुतम्।
शोको नाशयते सर्वं नास्ति शोकसमो रिपुः।।2.62.15।।

ஶோகோ நாஶயதே தைர்யம் ஶோகோ நாஶயதே ஶ்ருதம்.
ஶோகோ நாஶயதே ஸர்வம் நாஸ்தி ஶோகஸமோ ரிபு:।।2.62.15।।

மனத்துயரம் தைரியத்தை அழிக்கிறது; மனத்துயரம் அறநூல் ஞானத்தை அழிக்கிறது. மனத்துயரம் எல்லாவற்றையும் அழிக்கிறது. மனத்துயரம் போன்ற பரம விரோதி உலகில் இல்லவே இல்லை.

89.

यदाचरति कल्याणि शुभंवा यदिवाऽशुभम्।
तदेव लभते भद्रे कर्ता कर्मजमात्मनः।।2.63.6।।

யதாசரதி கல்யாணி சுபம் வா யதி வாசுபம்.
ததேவ லபதே பத்ரே கர்தா கர்மஜமாத்மந:।।2.63.6।।

"கல்யாணி! உத்தமியே! ஒருவன் நல்லதோ, தீயதோ எதைச் செய்தாலும் அதன் விளைவாக, அவன் அதை (சுகத்தையோ, துக்கத்தையோ) அடைந்தே தீருவான்.

## 90.

गुरुलाघवमर्थानामारम्भे कर्मणां फलम्।
दोषंवा यो न जानाति स बालइति होच्यते।।2.63.7।।

குருலாகவமர்தாநாமாரம்பே கர்மணாம் பலம்.
தோஷம் வா யோ ந ஜாநாதி ஸ பால இதி
ஹோச்யதே।।2.63.7।।

எவனொருவன் செயல்களைச் செய்யத் தொடங்கும் போதே, அதன் பயன் மிகுந்ததா அல்லது குறைவானதா, என்பதை எண்ணிப் பார்க்காமலும், தீமையை விளைவிக்கக் கூடியதா என்பதை அறியாமலும் செயல்படுகிறானோ, அவன் அறிவற்றவன் எனப்படுகிறான்.

## 91.

कश्चिदाम्रवणंछित्त्वा पलाशांश्च निषिञ्चति।
पुष्पं दृष्ट्वा फले गृध्नुस्सशोचति फलागमे।।2.63.8।।

கஶ்சிதாம்ரவணம் சித்வா பலாசாம்ஶ்ச நிஷிஞ்சதி.
புஷ்பம் த்ருஷ்ட்வா பலே க்ருத்நுஸ் ஸ ஶோசதி
பலாகமே।।2.63.8।।

கண்கவர் மலர்களைக் கண்டு, அவற்றிலிருந்து இனிய பழங்கள் கிடைக்கும் என்று கருதி (சிறிய பூக்கள் பூக்கும்) மாமரங்களை வெட்டிச் சாய்த்துவிட்டு (அழகிய மலர்கள் பூக்கும்) புரச மரங்களுக்கு தண்ணீர் ஊற்றி வளர்ப்பவன், காய் தோன்றி கனியாகும் காலத்தில் வருந்தவே செய்வான்

92.

क्षत्रियेण वधो राजन्वानप्रस्थे विशेषतः।
ज्ञानपूर्वं कृतस्स्थानाच्च्यावयेदपि वज्रिणम्।।2.64.24।।

க்ஷத்ரியேண வதோ ராஜந் வாநப்ரஸ்தே விஶேஷத:.
ஞாநபூர்வம் க்ருதஸ் ஸ்தாநாச்ச்யாவயேதபி
வஜ்ரிணம்।।2.64.24।।

அரசே! ஒரு வானபிரஸ்தனை மனம் அறிந்து ஒரு க்ஷத்ரியன் கொலை செய்தால், அப்படி செய்தவன் வஜ்ராயுதம் தாங்கிய இந்திரனாகவே இருப்பினும் (அந்த மகாபாவம்) அவனைப் பதவியிலிருந்து தள்ளிவிடும்.

93.

नाराजके जनपदे विद्युन्माली महास्वनः।
अभिवर्षति पर्जन्यो महीं दिव्येन वारिणा।।2.67.9।।

நாராஜகே ஜநபதே வித்யுந்மாலீ மஹாஸ்வந:.
அபிவர்ஷதி பர்ஜந்யோ மஹீம் திவ்யேந
வாரிணா।।2.67.9।।

அரசன் இல்லாத நாட்டில் மின்னல் கூட்டங்களுடன் கர்ஜனை செய்யும் மேகம் திவ்வியமான மழை பொழிந்து பூமியை நனைக்காது

94.

नाराजके जनपदे बीजमुष्टिः प्रकीर्यते।
नाराजके पितुः पुत्रो भार्या वा वर्तते वशे।।2.67.10।।

நாராஜகே ஜநபதே பீஜமுஷ்டி: ப்ரகீர்யதே.
நாராஜகே பிது: புத்ரோ பார்யா வா வர்ததே
வஶே।।2.67.10।।

அரசன் இல்லாத நாட்டில் ஒரு கைப்பிடி விதையும் விளைநிலத்தில் தெளிக்கப்பட மாட்டாது. அரசன் இல்லாத நாட்டில் தந்தையின் சொல்லுக்கு மகன் அடிபணிய மாட்டான்; கணவனின் கட்டுப்பாட்டில் மனைவி இருக்கமாட்டாள்.

95.

नाराजके धनंचास्ति नास्ति भार्याप्यराजके।
इदमत्याहितं चान्यत्कुतस्सत्यमराजके।।2.67.11।।

நாராஜகே தநம் சாஸ்தி நாஸ்தி பார்யா ப்யராஜகே.
இத மத்யாஹிதம் சாந்யத் குதஸ்ஸத்ய மராஜகே।।2.67.11।।

அரசன் இல்லாத நாட்டில் தன்னுடையது என்று எந்தச் செல்வத்தையும் வைத்துக் கொள்ள முடியாது. அரசன் இல்லாத நாட்டில் தன்னுடைய மனைவி என்று (முறைப்படி மணந்த பெண்ணையும்) சொல்லிக் கொள்ள முடியாமற்போகும். அரசன் இல்லாத நாட்டில் இம்மாதிரியான பெருங்கேடு இருந்துகொண்டிருக்கும். எனவே வேறு எங்குதான் சத்தியத்தைக் காணமுடியும்?

96.

नाराजके जनपदे यज्ञशीला द्विजातयः।
सत्राण्यन्वासते दान्ता ब्राह्मणास्संशितव्रताः।।2.67.13।।

நாராஜகே ஜநபதே யக்ஞசீலா த்விஜாயதா: ।
ஸத்ராண்யன்வாஸதே தாந்தா ப்ராஹ்மணா:
ஸம்ஶிதவ்ரதா: ॥

அரசன் இல்லாத நாட்டில் வேள்வி செய்வதில் பற்றுடையவர்களும், தீவிர விரதானுஷ்டானமுடையவர்களும், புலன்களை வென்றவர்களும், வேத விற்பன்னர்களுமான அந்தணர்கள், ஸத்ரம் முதலான பெரும் யாகங்களை செய்யமாட்டார்கள்.

97.

नाराजके जनपदे प्रभूतनटनर्तकाः।
उत्सवाश्च समाजाश्च वर्धन्ते राष्ट्रवर्धनाः।।2.67.15।।

நாராஜகே ஜநபதே ப்ரபூதநடநர்தகா:.
உத்ஸவாஶ்ச ஸமாஜாஶ்ச வர்தந்தே
ராஷ்ட்ரவர்தநா:।।2.67.15।।

அரசன் இல்லாத நாட்டில் உற்சாகம் நிறைந்த ஆடல்வல்லார்கள் தம் கலைத்திறனைக் காட்டி சமுதாயத்தை மேம்படுத்தும் திருவிழா நிகழ்ச்சிகள் மற்றும் பேரவைக் கூட்டங்கள் அதிக அளவில் நடத்தப்படமாட்டா.

98.

नाराजके जनपदे सिद्धार्था व्यवहारिणः।
कथाभिरनुरज्यन्ते कथाशीलाः कथाप्रियैः।।2.67.16।।

நாராஜகே ஜநபதே ஸித்தார்தா வ்யவஹாரிண:.
கதாபிரநுரஜ்யந்தே கதாஶீலா: கதாப்ரியை:।।2.67.16।।

அரசன் இல்லாத நாட்டில் ஒரு பொருள் குறித்து வாதப்பிரதிவாதங்கள் நடைபெறுவதில்லை; கதை கேட்பதில் ஆர்வமுடையவர்கள்கூட இனிமையாக கதை சொல்பவர்களின் நிகழ்ச்சிகளில் ஈடுபடுவதில்லை.

99.

नाराजके जनपदे धनवन्तस्सुरक्षिताः।
शेरते विवृतद्वाराः कृषिगोरक्षजीविनः।।2.67.19।।

நாராஜகே ஜநபதே தநவந்தஸ்ஸுரக்ஷிதா:.
ஶேரதே விவ்ருதத்வாரா:
க்ருஷிகோரக்ஷஜீவிந:।।2.67.19।।

அரசன் இல்லாத நாட்டில் செல்வந்தர்களுக்குப் பாதுகாப்பு கிடைக்காது. பயிரிடுதல், பசுக்களை பராமரித்தல் போன்ற பணிகளால் உயிர்வாழ்பவர்கள் கதவைத் திறந்து வைத்துக் கொண்டு தூங்கமாட்டார்கள். (சொத்துக்கள் கொள்ளை போய்விடுமோ என்ற அச்சம் தோன்றிவிடும்.)

100.

नाराजके जनपदे वणिजो दूरगामिनः।
गच्छन्ति क्षेममध्वानं बहुपण्यसमाचिताः।।2.67.22।।

நாராஜகே ஜநபதே வணிஜோ தூரகாமிந:.
கச்சந்தி க்ஷேமமத்வாநம்
பஹுபண்யஸமாசிதா:।।2.67.22।।

அரசன் இல்லாத நாட்டில் ஏராளமான வணிகப் பொருட்களை எடுத்துக் கொண்டு, வியாபாரிகள் ஆபத்துக்கள் இல்லாமல் வெகுதூரம் செல்ல முடிவதில்லை.

101.

नाराजके जनपदे चरत्येकचरोवशी।
भावयन्नात्मनाऽत्मानं यत्र सायंगृहो मुनिः।।2.67.23।।

நாராஜகே ஜநபதே சரத்யேகசரோ வஶீ.
பாவயந்நாத்மநாத்மாநம் யத்ர ஸாயம்க்ருஹோ
முநி:।।2.67.23।।

அரசன் இல்லாத நாட்டில் தன் மனத்தால் பரமாத்மாவைத் தியானித்துக் கொண்டு, தனி ஒருவனாக நடந்து சென்று கொண்டு, எந்த இடத்தில் மாலைப்பொழுது ஏற்படுகிறதோ, அங்கேயே தங்கிவிட்டு புலனடக்கமுடைய தவசீலர் சுற்றித் திரிய மாட்டார்.

102.

नाराजके जनपदे योगक्षेमं प्रवर्तते।
नचाप्यराजके सेना शत्रून्विषहते युधि।।2.67.24।।

நாராஜகே ஜநபதே யோகக்ஷேம் ப்ரவர்ததே.
நசாப்யராஜகே ஸேநா ஶ்த்ரூந்விஷஹதே யுதி।।2.67.24।

அரசன் இல்லாத நாட்டில் மக்களால் அடைய முடியாத பொருளை அடைவதும் (யோகம்), அடைந்த பொருள்களைக் காப்பாற்றவும் (க்ஷேமம்) முடியாமல் போகும். அரசன் இல்லாத நாட்டில் படைவீரர்கள் போர்க்களத்தில்கூட எதிரிகளை எதிர்த்துப் போர் புரியமாட்டார்கள்.

103.

नाराजके जनपदे नराश्शास्त्रविशारदाः।
संवदन्तोऽवतिष्ठन्ते वनेषूपवनेषुच।।2.67.26।।

நாராஜகே ஜநபதே நராஶாஸ்த்ரவிஶாரதா:.
ஸம்வதந்தோவதிஷ்டந்தே வநேஷூபவநேஷு ச
।।2.67.26।।

அரசன் இல்லாத நாட்டில் அறநூல் வல்லுநர்களான அறிஞர்கள் சோலைகளிலும் பூங்காக்களிலும் கூடியமர்ந்து சாஸ்திர ஆராய்ச்சியில் ஈடுபடமாட்டார்கள்.

104.

यथाह्यनुदका नद्यःयथावाऽप्यतृणं वनम्।
अगोपाला यथा गावस्तथा राष्ट्रमराजकम्।।2.67.29।।

யதா ஹ்யனுதகா நத்ய: யதா வாப்யத்ருணம் வநம்.
அகோபாலா யதா காவஸ்ததா
ராஷ்ட்ரமராஜகம்।।2.67.29।।

அரசன் இல்லாத நாடு, தண்ணீர் இல்லாத ஆறுகள் போலவும், பசும்புல் இல்லாத காடு போலவும், இடையன் இல்லாத பசுக்கள் போலவும் பயனற்றதாக ஆகிவிடும்.

105.

नाराजके जनपदे स्वकंभवति कस्यचित्।
मत्स्याइव नरा नित्यं भक्षयन्ति परस्परम्।।2.67.31।।

நாராஜகே ஜநபதே ஸ்வகம் பவதி கஸ்யசித்.
மத்ஸ்யா இவ நரா நித்யம் பக்ஷயந்தி பரஸ்பரம்।।2.67.31।

அரசன் இல்லாத நாட்டில் தன்னுடையது என்று எதுவும் யாருக்கும் கிடையாது. ஒரு மீன் இன்னொரு மீனை விழுங்குவதுபோல மக்கள் ஒருவரையொருவர் அழித்துக் கொள்வார்கள்.

106. यमो वैश्रवणश्शक्रः वरुणश्चमहाबलः।
विशेष्यन्ते नरेन्द्रेण वृत्तेन महता ततः।।2.67.35।।

யமோ வைஶ்ரவணஶ் ஶக்ர꞉ வருணஶ்ச மஹாபல꞉.
விஶேஷ்யந்தே நரேந்த்ரேண வ்ருத்தேந மஹதா
தத꞉।।2.67.35।।

மன்னன் தன்னுடைய உயர்ந்த செயல்பாடுகளால் யமன், குபேரன், இந்திரன், மற்றும் பலமிக்க வருணன் ஆகியோரைக் காட்டிலும் மேலானவன். (யமன் தண்டனை மட்டும் கொடுக்கிறான்; குபேரன் செலவத்தைக் கொடுக்கிறான்; இந்திரன் பரிபாலிக்கிறான்; வருணன் நல்லொழுக்கத்தைத் தருகிறான். ஆனால் மன்னனிடம் இந்த நான்கு குணங்களும் இருக்கின்றன.)

107.
दानयज्ञाधिकारा हि शीलश्रुतिवचोऽनुगा।
बुद्धिस्ते बुद्धिसम्पन्न प्रभेवार्कस्यमन्दिरे।।2.72.25।।

தாநயஜ்ஞாதிகாரா ஹி ஶீலஶ்ருதிவசோऽநுகா.
புத்திஸ்தே புத்திஸம்பந்ந ப்ரபேவார்கஸ்ய
மந்திரே।।2.72.25।।

நற்புத்தி நிறைந்தவனே! ஆகாயத்தில் சூரியனுடன் கூடிய பிரபை போல, உனது நோக்கம் தானம் செய்வதிலும் யாகங்கள் செய்வதிலும் இணைபிரியாது இருக்கவேண்டும். நல்லொழுக்கம், வேதமோதுதல், தவ வாழ்க்கைள்- இவற்றை சார்ந்திருக்க வேண்டும்.

108.

कच्चिन्न ब्राह्मणधनं हृतं रामेण कस्यचित्।
कच्चिन्नाढ्यो दरिद्रो वा तेनापापो विहिंसितः।।2.72.44।।

கச்சிந்ந ப்ராஹ்மணதநம் ஹ்ருதம் ராமேண கஸ்யசித்.
கச்சிந்நாட்யோ தரித்ரோ வா தேநாபாபோ
விஹிம்ஸித:।।2.72.44।।

(பரதன் கைகேயியிடம் ராமன் காட்டிற்குச் சென்றதையொட்டி) ராமன் யாரோ ஓர் அந்தணருடைய செல்வத்தைக் கவர்ந்தாரா? குற்றமற்ற ஒரு செல்வந்தனோ, அல்லது, ஏழையோ அவரால் கடுமையாக துன்புறுத்தப்பட்டனரா?

109.

कच्चिन्न परदारान्वा राजपुत्रोऽभिमन्यते।
कस्मात्सदण्डकारण्ये भ्रूणहेव विवासितः।।2.72.45।।

கச்சிந்ந பரதாராந்வா ராஜபுத்ரோபிமந்யதே.।
கஸ்மாத்ஸ தண்டகாரண்யே ப்ரூணஹேவ
விவாஸித:।।2.72.45।।

அப்படியில்லையென்றால் அரசகுமாரரான ராமன், பிறர் மனைவியை மனத்தாலாவது விரும்பினாரா? கருச்சிதைவு என்ற மகாபாதகத்தைச் செய்பவனுக்கு அளிக்கப்படும் கொடுந்தண்டனை போல, எந்தக் காரணத்திற்காக இவர் தண்டகாரண்யத்திற்குக் கடத்தப்பட்டார்.

## 110.

अङ्गप्रत्यङ्गजः पुत्रो हृदयाच्चापि जायते।
तस्मात्प्रियतमो मातुः प्रिया एवतु बान्धवाः।।2.74.14।।

அங்கப்ரத்யங்கஜ: புத்ரோ ஹ்ருதயாச்சாபி ஜாயதே.
தஸ்மாத்ப்ரியதமோ மாது: ப்ரியா ஏவ து
பாந்தவா:।।2.74.14।।

தாய்-தந்தையரின் முக்கிய உறுப்புக்கள், மற்றும் அடுத்த நிலையில் உள்ள உபகரணங்கள், மற்றும் மனத்தின் பாசத்திலிருந்தும் புதல்வன் பிறக்கிறான் என்ற காரணத்தால் அன்னைக்கு மிகவும் வேண்டியவன் ஆகிறான். மற்ற உற்றார்-உறவினர்கள் எவரும் இதைவிடக் குறைவான அன்புக்கு மட்டுமே உரியவர்கள்.

## 111.

कृताशास्त्रानुगा बुद्धिर्माभूत्तस्य कदाचन।
सत्यसन्धस्सतांश्रेष्ठो यस्याऽर्योऽनुमतेगतः।।2.75.21।।

க்ருதா ஶாஸ்த்ராநுகா புத்திர்மாபூத்தஸ்ய கதாசந.
ஸத்யஸந்தஸ் ஸதாம்ஶ்ரேஷ்டோ யஸ்யார்யோநுமதே
கத:।।2.75.21।।

(பரதன் சபதம்) எவனுடைய விருப்பத்தின் பேரில் சொன்ன சொல் தவறாதவரும் நன்னெறியாளர்களில் சிறந்தவரும், உயர்குடிப்பிறப்பாளருமான அவர் (ராமர்) (காட்டிற்கு) சென்றாரோ, அவனுடைய புத்தி ஆசார்யர்களால் உபதேசிக்கப்பட்ட நல்வழியில் செல்லவேண்டாம்.

112.

हस्त्यश्वरथसम्बाधे युद्धे शस्त्रसमाकुले।
मास्मकार्षीत्सतांधर्मं यस्यार्योऽनुमतेगतः।।2.75.27।।

ஹஸ்த்யஶ்வரதஸம்பாதே யுத்தே ஶஸ்த்ரஸமாகுலே.
மா ஸ்ம கார்ஷீத்ஸதாம் தர்மம் யஸ்யார்யோநுமதே
கத:।।2.75.27।।

எவனுடைய ஸம்மதத்தின்பேரில், மாமனிதரான அவர் காட்டிற்குச் சென்றாரோ அவன் யானை-குதிரை-தேர்கள் நிறைந்து, அஸ்திர-சஸ்திரப் பிரயோகம் நடைபெறும் போர்க்களத்தில் மேலோர்களின் அறநெறியைக் கடைப்பிடிக்காதவர்களுக்கு (அதர்மயுத்தம் செய்கிறவர்களுக்கு) ஏற்படும் பாவத்தை அடைவானாக.

113.

पायसंकृसरं छागंवृथासोऽश्नातु निर्घृणः।
गुरूंश्चाप्यवजानातु यस्याऽर्योऽनुमतेगतः।।2.75.30।।

பாயஸம்க்ருஸரம் சாகம்வ்ருதா ஸோऽஶ்நாது நிர்க்ருண:.
குரும்ஶ்சாப்யவஜாநாது யஸ்யார்யோநுமதே கத:।।2.75.30।।

எவனுடைய அனுமதியுடன் மாமனிதரான அவர் காட்டிற்குச் சென்றாரோ, அவன் பாயஸம், எள்ளன்னம், ஆட்டின் பால் ஆகியவைகளை (தேவர்கள், மூதாதையர், பகவான் ஆகியோருக்காக அல்லாமல்) தனக்காகவே செய்து உண்ணும் ஈரமற்ற நெஞ்சினன் ஆவானாக; ஆசார்யர்களையும் அவன் அவமரியாதை செய்வானாக.

## 114.

विश्वासात्कथितं किञ्चित्परिवादं मिथःक्वचित्।
विवृणोतु सदुष्टात्मा यस्यार्योऽनुमतेगतः।।2.75.32।।

விஸ்வாஸாத்கதிதம் கிஞ்சித்பரிவாதம் மித꞉ க்வசித்.
விவ்ருணோது ஸ துஷ்டாத்மா யஸ்யார்யோநுமதே கத꞉।।2.75.32।।

எவனுடைய அனுமதியின்பேரில் மாமனிதரான அவர் காட்டிற்குச் சென்றாரோ, அவன் நண்பனிடமுள்ள நம்பிக்கையால் தமக்குள் பரிமாறிக் கொள்ளப்பட்ட, இன்னொருவருடைய குற்றத்தை, மற்றவர்களுக்கும் கூறுவானாக. (நட்புத் துரோகம் செய்த பாவத்தை அடைவானாக)

## 115.

अप्राप्य सदृशान्दाराननपत्यः प्रमीयताम्।
अनवाप्य क्रियांधर्म्यां यस्यार्योऽनुमतेगतः।।2.75.35।।

அப்ராப்ய ஸத்ருஶாந் தாராநநபத்ய꞉ ப்ரமீயதாம்.
அநவாப்ய க்ரியாம் தர்ம்யாம் யஸ்யார்யோநுமதே கத꞉।।2.75.35।।

எவனுடைய அனுமதியுடன் மாமனிதரான அவர் காட்டிற்குச் சென்றாரோ, அவன் தன் கருத்துக்கு ஏற்ற மனைவியை அடையாமல், அதனால் குடும்பத் தர்மங்களைக் கைக்கொள்ள முடியாமலும், சந்ததி இல்லாதவனாகவும் மரிப்பானாக.

116.

राजस्त्री बालवृद्धानां वधे यत्पापमुच्यते।
भृत्यत्यागेच यत्पापं तत्पापं प्रतिपद्यताम्।।2.75.37।।

ராஜஸ்த்ரீ பாலவ்ருத்தாநாம் வதே யத்பாபமுச்யதே.
ப்ருத்யத்யாகேச யத்பாபம் தத்பாபம்
ப்ரதிபத்யதாம்।।2.75.37।।

மன்னன், பெண், சிறுவன், வயோதிகன் - இவர்களைக் கொன்றால் என்ன பாவம் வந்து சேரும் என்று விதிக்கப்பட்டிருக்கிறதோ, மேலும், தன்னை அண்டிப் பிழைப்பவர்களை உதறி விடுவதால் என்ன பாவம் வந்து சேருமோ, இவை யாவும் அவனை அடைவதாகுக.

117.

लाक्षया मधुमांसेन लोहेनच विषेणच।
सदैव बिभृयाद्भृत्यान्यस्यार्योऽनुमते गतः।।2.75.38।।

லாக்ஷயா மதுமாம்ஸேந லோஹேந ச விஷேண ச.
ஸதைவ பிப்ருயாத் ப்ருத்யாந் யஸ்யார்யோநுமதே
கத:।।2.75.38।।

எவனுடைய சம்மதத்தின்பேரில் மாமனிதரான அவர் காட்டிற்குச் சென்றாரோ, அவன் அரக்கு, கள், இறைச்சி, இரும்பு, விஷம் ஆகியவைகளை விற்பதால் வரும் வருமானத்தினால் தன்னை அண்டியிருப்பவர்களை எப்போதும் காப்பாற்றி வருவானாக. (இந்தப்பொருள்களை விற்பது மகா பாவம் என்று கூறப்பட்டுள்ளது..)

118.

सङ्ग्रामे समुपोढेस्म शत्रुपक्षभयङ्करे।
पलायमानो वध्येत यस्यार्योऽनुमतेगतः।।2.75.39।।

ஸங்க்ராமே ஸமுபோடே ஸ்ம சத்ருபக்ஷபயங்கரே.
பலாயமானோ வத்யேத யஸ்யார்யோநுமதே
கத:।।2.75.39।।

எவனுடைய சம்மதத்தின்பேரில் மாமனிதரான அவர் காட்டிற்குச் சென்றாரோ, அவன் எதிரி படையினருக்குப் பயங்கரத்தை விளைவிக்கும் போர்க்களத்திலிருந்து புறமுதுகிட்டுத் தப்பியோடுபவனாக கொல்லப்படட்டும்

119.

कपालपाणिःपृथिवीमटतां चीरसंवृतः।
भिक्षमाणो यथोन्मत्तो यस्यार्योऽनुमतेगतः।।2.75.40।।

கபாலபாணி: ப்ருதிவீமடதாம் சீரஸம்வ்ருத:.
பிக்ஷமாணோ யதோந்மத்தோ யஸ்யார்யோநுமதே
கத:।।2.75.40।।

எவனுடைய சம்மதத்தின்பேரில் மாமனிதரான அவர் காட்டிற்குச் சென்றாரோ, அவன் கந்தைத்துணி உடுத்தி, கப்பரை ஓடு ஏந்தி பிச்சையெடுப்பவனாக பைத்தியம் பிடித்தவன் போல் உலகில் சுற்றி வருவானாக.

## 120.

मद्येप्रसक्तो भवतु स्त्रीष्वक्षेषुच नित्यशः।
कामक्रोधाभिभूतस्तु यस्यार्योऽनुमतेगतः।।2.75.41।।

மத்யே ப்ரஸக்தோ பவது ஸ்த்ரீஷ்வக்ஷேஷு ச நித்யஶ:.
காமக்ரோதாபிபூதஸ்து யஸ்யார்யோநுமதே கத:।।2.75.41।।

எவனுடைய சம்மதத்தின்பேரில் மாமனிதரான அவர் காட்டிற்குச் சென்றாரோ, அவன் காமம், கோபம் ஆகிய தீய குணங்களுக்கு ஆட்பட்டு, கட்குடி, பெண்ணுறவு, சூதாட்டம் ஆகியவைகளில் எப்போதும் ஈடுபட்டவனாக ஆகட்டும்.

## 121.

मास्म धर्मे मनोभूयादधर्मं स निषेवताम्।
अपात्रवर्षी भवतु यस्यार्योऽनुमतेगतः।।2.75.42।।

மாஸ்ம தர்மே மநோ பூயாததர்மம் ஸ நிஷேவதாம்.
அபாத்ரவர்ஷீ பவது யஸ்யார்யோநுமதே கத:।।2.75.42।।

எவனுடைய சம்மதத்தின்பேரில் மாமனிதரான அவர் காட்டிற்குச் சென்றாரோ, அவன் தர்மத்தில் மனம் செலுத்துபவனாக ஆகவேண்டாம்; அதர்மத்திலேயே குடியிருக்கட்டும்; தகுதியில்லாதவர்களுக்கு ஏராளமாகத் தானம் செய்பவனாகட்டும்.

## 122.

सञ्चितान्यस्य वित्तानि विविधानि सहस्रशः।
दस्युभिर्विप्रलुप्यन्तां यस्यार्योऽनुमते गतः।।2.75.43।।

ஸஞ்சிதாந்யஸ்ய வித்தாநி விவிதாநி ஸஹஸ்ரஶ:.
தஸ்யுபிர்விப்ரலுப்யந்தாம் யஸ்யார்யோநுமதே
கத:।।2.75.43।।

எவனுடைய சம்மதத்தின்பேரில் மாமனிதரான அவர் காட்டிற்குச் சென்றாரோ, அவன் பெருமுயற்சி செய்து சேர்த்து வைத்த பல்லாயிரம் மதிப்புடைய பலவகைச் சொத்துக்கள் திருடர்களால் கொள்ளையிடப்படட்டும்.

## 123.

उभे सन्ध्ये शयानस्य यत्पापं परिकल्प्यते।
तच्चपापं भवेत्तस्य यस्यार्योऽनुमतेगतः।।2.75.44।।

உபே ஸந்த்யே ஶயாநஸ்ய யத்பாபம் பரிகல்ப்யதே.
தச்சபாபம் பவேத்தஸ்ய யஸ்யார்யோநுமதே
கத:।।2.75.44।।

எவனுடைய சம்மதத்தின்பேரில் மாமனிதரான அவர் நாட்டைவிட்டுச் சென்றாரோ, அவனுக்கு காலை, மாலை இரு ஸந்தியாகாலங்களிலும் உறங்குபனுக்கு எந்தப் பாவம் விதிக்கப்பட்டிருக்கிறதோ அந்தப் பாவம் ஏற்படக்கடவது.

124. यदग्निदायके पापं यत्पापं गुरुतल्पगे।
मित्रद्रोहेच यत्पापं तत्पापं प्रतिपद्यताम्।।2.75.45।।

யதக்நிதாயகே பாபம் யத்பாபம் குருதல்பகே.
மித்ரத்ரோஹே ச யத்பாபம் தத்பாபம்
ப்ரதிபத்யதாம்।।2.75.45।।

பிறர் உடைமைகளில் கொள்ளி வைத்து அழிப்பவனுக்கு எந்தப் பாவமோ, குருவின் மனைவியுடன் உறவு கொள்பவனுக்கு எந்தப் பாவமோ, நண்பனை வஞ்சகமாக ஏமாற்றுபவனுக்கு எந்தப் பாவமோ, அந்தப் பாவத்தையும் அடைவானாக.

125.

देवतानां पित्रूणांच मातापित्रोस्तथैवच।
मास्मकार्षीत्स शुश्रूषां यस्यार्योऽनुमतेगतः।।2.75.46।।

தேவதாநாம் பித்ரூணாம் ச மாதாபித்ரோஸ்ததைவ ச.
மா ஸ்ம கார்ஷீத்ஸ ஶுஶ்ரூஷாம் யஸ்யார்யோநுமதே
கத:।।2.75.46।।

எவனுடைய அனுமதியின்பேரில் மாமனிதரான அவர் நாட்டைவிட்டு காட்டிற்குச் சென்றாரோ, அவன் தேவதைகள்-பித்ருக்கள்-பெற்றோர்களுக்குச் சேவை செய்யாமற் போகட்டும். (இவர்களுக்குச் செய்யும் வழிபாட்டுப் பணிகளால் கிடைக்கக் கூடிய புண்ணியத்தை இழந்தவனாக ஆகட்டும்.)

126.

सतांलोकात्सतांकीर्त्यास्सञ्जुष्टात्कर्मणस्तथा।
भ्रश्यतु क्षिप्रमद्यैव यस्यार्योऽनुमतेगतः।।2.75.47।।

ஸதாம் லோகாத்ஸதாம் கீர்த்யாஸ் ஸஞ்ஜுஷ்டாத்
கர்மணஸ்ததா.
ப்ரஶ்யது க்ஷிப்ரமத்யைவ யஸ்யார்யோநுமதே கத:।।2.75.47।।

எவனுடைய அனுமதியின்பேரில் மாமனிதரான அவர்
நாட்டைவிட்டு காட்டிற்குச் சென்றாரோ, அவன்
சான்றோர்களின் கூட்டத்திலிருந்தும், சான்றோர்களின்
நன்மதிப்பிலிருந்தும், அவ்வாறே நன்றாக அனுஷ்டிக்கப்பட்டு
வந்த கர்மாக்களிலிருந்தும், இன்றே உடனேயே
நழுவியவன் ஆவானாக.

127.

अपास्य मातृशुश्रूषामनर्थे सोऽवतिष्ठताम्।
दीर्घबाहुर्महावक्षा: यस्यार्योऽनुमतेगतः।।2.75.48।।

அபாஸ்ய மாத்ருஶுஶ்ரூஷாமநர்தே ஸோவதிஷ்டதாம்.
தீர்கபாஹுர் மஹாவக்ஷா: யஸ்யார்யோநுமதே
கத:।।2.75.48।।

எவனுடைய விருப்பத்தின்பேரில் நீண்ட புஜங்களையும்
விசாலமான மார்பையும் உடைய மாமனிதரான அவர்
நாட்டைவிட்டு காட்டிற்குச் சென்றாரோ, அவன் தன்னைப்
பெற்ற அன்னைக்குப் பணிவிடை செய்யாமற்போகட்டும்;
கெடுதலைச் செய்யும் முறைகளில் உறுதியாக நிற்பானாக.

128.

धर्मदारान्परित्यज्य परदारान्निषेवताम्।
त्यक्तधर्मरतिर्मूढो यस्यार्योऽनुमतेगतः।।2.75.53।।

தர்மதாராந்பரித்யஜ்ய பரதாராந்நிஷேவதாம்.
த்யக்ததர்மரதிர்மூடோ யஸ்யார்யோநுமதே கத:।।2.75.53।।

எவனுடைய இஷ்டப்படி மாமனிதரான அவர்காட்டிற்குச் சென்றாரோ, அவன்
முறைப்படி விவாகம் செய்து கொண்ட மனைவியை புறக்கணித்து, பிறர் மனைவிகளிடம் ஆசை கொள்வானாக. அறிவில்லாத அவன், அறநெறிகளில் ஆழ்ந்த பற்றினைத் துறந்தவன் ஆகட்டும்.

129.

पानीयदूषके पापं तथैव विषदायके।
यत्तदेकस्सलभतां यस्यार्योऽनुमतेगतः।।2.75.55।।

பாநீயதூஷகே பாபம் ததைவ விஷதாயகே.
யத்ததேகஸ்ஸ லபதாம் யஸ்யார்யோநுமதே கத:।।2.75.55।।

எவனுடைய சம்மதத்தின்பேரில் மாமனிதரான அவர் காட்டிற்குச் சென்றாரோ, அவன் குடிநீரை (குடிப்பதற்கு தகுதியில்லாதபடி) அசுத்தம் செய்பவனுக்கு என்ன பாவமோ, அதேபோல் விஷம் கொடுத்துக் கொல்பவனுக்கு என்ன பாவமோ, அவை அனைத்தையும் இவன் ஒருவனே அடைவானாக.

130.

ब्राह्मणायोद्यतां पूजां विहन्तु कलुषेन्द्रियः।
बालवत्सांच गां दोग्धु यस्यार्योऽनुमतेगतः।।2.75.56।।

ப்ராஹ்மணாயோத்யதாம் பூஜாம் விஹந்து கலுஷேந்த்ரிய:.
பாலவத்ஸாம் ச காம் தோக்து யஸ்யார்யோநுமதே
கத:।।2.75.56।।

எவனுடைய விருப்பத்தின்படி மாமனிதரான அவர்காட்டிற்குச் சென்றாரோ, அவன் பொறி கலங்கி வேதவித்துக்களுக்குப் பூஜை செய்வதற்காக சித்தம் செய்யப்பட்டதை நாசம் செய்பவனாகுக. புதிதாக ஈன்றெடுத்த கன்றினுடைய பசுவிடமிருந்து பாலை கறக்கக்கடவன். (கன்று போட்டபின் பத்து நாட்கள் வரை தாய்ப் பசுவிடமிருந்து பால் கறக்கக் கூடாது என்பது விதி).

131.

तृषार्तं सति पानीये विप्रलम्भेन योजयेत्।
लभेत तस्य यत्पापं यस्यार्योऽनुमतेगतः।।2.75.57।।

த்ருஷார்தம் ஸதி பாநீயே விப்ரலம்பேந யோஜயேத்.
லபேத தஸ்ய யத்பாபம் யஸ்யார்யோநுமதே
கத:।।2.75.57।।

எவனுடைய விருப்பத்தின்படி மாமனிதரான அவர்காட்டிற்குச் சென்றாரோ, அவன் தன்னிடம் குடிதண்ணீர் இருக்கும்போது, தாகத்தால் தவித்துக் கொண்டிருப்பவனுக்குக் கொடுக்காமல் ஏமாற்றுபவன், என்ன பாவத்தை அடைவானோ, அந்த பாவத்தை அடையக் கடவன்.

132.

भक्त्या विवदमानेषु मार्गमाश्रित्य पश्यतः।
तस्य पापेन युज्येत यस्यार्योऽनुमतेगतः।।2.75.58।।

பக்த்யா விவதமாநேஷு மார்கமாஸ்ரித்ய பஸ்யத:.
தஸ்ய பாபேந யுஜ்யேத யஸ்யார்யோநுமதே கத:।।2.75.58।।

எவனுடைய விருப்பத்தின்படி மாமனிதரான அவர் காட்டிற்குச் சென்றாரோ, அவன் இருவர் தங்களுக்குள் வாய்ச்சண்டையில் ஈடுபட்டிருக்கும்போது அவர்கள் பிரச்னையில் எங்கே நியாயம் இருக்கிறது என்பதை புரிந்து கொண்டபோதிலும், அவ்விருவருள் தனக்கு வேண்டிய ஒருவனுக்கு அனுகூலமாகப் பேசுபவனுக்கு ஏற்படும் பாவத்தை அடையக் கடவன்.

133.

इदमेवामृतं प्राहू राज्ञि राजर्षयःपरे।
वनवासं भवार्थाय प्रेत्यमे प्रपितामहाः।।2.94.19।।

இதமேவாம்ருதம் ப்ராஹூ ராஜ்ஞி ராஜர்ஷய: பரே.
வநவாஸம் பவார்தாய ப்ரேத்ய மே
ப்ரபிதாமஹா:।।2.94.19।।

(ராமர் ஸீதையிடம்) தேவி! என்னுடைய முன்னோர்களும் மற்றுமுள்ள ராஜரிஷிகளும் இவ்விதமான வனவாசம், உடலை உகுத்த பிறகு மிக உயர்ந்த நிலையை அடைவிக்கும் சாதனம் எனக் கூறியிருக்கிறார்கள்.

134.

यद्द्रव्यं बान्धवानांवा मित्राणांवा क्षये भवेत्।
नाहंतत्प्रतिगृह्णीयां भक्ष्यान्विषकृतानिव।।2.97.4।।

யத்த்ரவ்யம் பாந்தவாநாம் வா மித்ராணாம் வா க்ஷயே பவேத்.
நாஹம் தத்ப்ரதிக்ருஹ்ணீயம்
பக்ஷ்யான்விஷக்ருதாநிவ।।2.97.4।।

(ராமர் லக்ஷ்மணரிடம்) உறவினர்கள், நண்பர்கள் அழிவினால் எந்தப் பொருள் கிடைக்குமோ, அதை விஷம் கலந்த உணவைப்போல நான் ஏற்கமாட்டேன்.

135.

नेयं मम मही सौम्य दुर्लभा सागराम्बरा।
नहीच्छेयमधर्मेण शक्रत्वमपि लक्ष्मण।।2.97.7।।

நேயம் மம மஹீ ஸௌம்ய துர்லபா ஸாகராம்பரா.
ந ஹீச்சேயமதர்மேண ஶக்ரத்வமபி லக்ஷ்மண।।2.97.7।।

நல்லியல்பினாய்! கடலை எல்லையாகக் கொண்ட இந்தப் பூமண்டலம் என்னால் அடைய முடியாததன்று. ஆனால் லட்சுமணா! அதர்மத்தினால் (தவறான வழிகளை மேற்கொள்வதால்) இந்திரப்பதவியே கிடைப்பதானாலும் அதை நான் விரும்பமாட்டேன்.

## 136.

कच्चिद्विनयसम्पन्नः कुलपुत्रो बहुश्रुतः।
अनसूयुरनुद्रष्टा सत्कृतस्ते पुरोहितः।।2.100.11।।

கச்சித்விநயஸம்பந்ந꞉ குலபுத்ரோ பஹுஸ்ருத꞉.
அநஸூயுரநுத்ரஷ்டா ஸத்க்ருதஸ்தே
புரோஹித꞉।।2.100.11

(ராமர் பரதனிடம்) பணிவுமிக்கவர், நற்குலத்தில் தோன்றியவர்; பல நூல்களைக் கற்றும் கேட்டும் அறிந்தவர்; பொறாமையற்றவர்; முக்காலங்களையும் அறிந்தவர். இப்படிப்பட்ட உன் (நமது) புரோகிதரான (சுயக்ஞர்) அவரை, நீ மதிப்புடன் நடத்துகிறாயா?

## 137.

कच्चिदग्निषु ते युक्तो विधिज्ञो मतिमानृजुः।
हुतंच होष्यमाणंच काले वेदयते सदा।।2.100.12।।

கச்சிதக்நிஷு தே யுக்தோ விதிஜ்ஞோ மதிமாந்ருஜு꞉.
ஹுதம் ச ஹோஷ்யமாணம் ச காலே வேதயதே
ஸதா।।2.100.12।।

மூன்று அக்னிகளையும் பொறுப்புடன் கவனிப்பதற்காக நீ நியமித்துள்ள, வேள்வி நெறிமுறை, நூல் அறிவு, நேர்மை கொண்ட அந்தணர், சரியான காலத்தில் செய்யப்பட்ட ஆகுதி, செய்யப்படவேண்டிய ஆகுதிகள் பற்றி உனக்கு தெரிவிக்கிறாரா?

138.

कच्चिद्देवान्पितॄन् भृत्यान् गुरून्पितृसमानपि।
वृद्धांश्च तात वैद्यांश्च ब्राह्मणांश्चाभिमन्यसे।।2.100.13।।

கச்சித்தேவாந்பித்ரூந் ப்ருத்யான் குரூந்பித்ருஸமாநபி.
வ்ருத்தாம்ஶ்ச தாத வைத்யாம்ஶ்ச
ப்ராஹ்மாணாம்ஶ்சாபிமந்யஸே।।2.100.13।।

குழந்தாய்! தேவதைகள் பித்ருக்கள், வேலைக்காரர்கள், ஆசார்யர்கள், தந்தை போல் போற்றத்தக்க வயோதிகர்கள், மருத்துவர்கள், மற்றும் அந்தணர்களை உரிய முறையில் கௌரவப்படுத்துகிறாய், அல்லவா?

139.

मन्त्रो विजयमूलंहि राज्ञां भवति राघव।
सुसंवृतो मन्त्रधरैरमात्यैश्शास्त्रकोविदैः।।2.100.16।।

மந்த்ரோ விஜயமூலம் ஹி ராஜ்ஞாம் பவதி ராகவ.
ஸுஸம்வ்ருதோ மந்த்ரதரைரமாத்யை
ஶாஸ்த்ரகோவிதை:।।2.100.16।।

பரதனே! அமைச்சர்களுடன் கலந்து ஆலோசிக்கப்படும் ஆலோசனைகள்தாம் எடுத்த காரியங்களில் வெற்றியின் அடிப்படை. அதுவும் கூட, ஆலோசனை சொல்வதில் நிபுணர்களும், அரசநீதி பற்றி நன்குணர்ந்தவர்களுமான மந்திரிகளால் ஆலோசனை முடிவுகள் ரகசியமாகக் காப்பாற்றப்பட வேண்டும்.

140.

कच्चिन्मन्त्रयसे नैकः कच्चिन्नबहुभिस्सह।
कच्चित्ते मन्त्रितो मन्त्रो राष्ट्रं न परिधावति।।2.100.18।।

கச்சிந்மந்த்ரயஸே நைக: கச்சிந்ந பஹுபிஸ்ஸஹ.
கச்சித்தே மந்த்ரிதோ மந்த்ரோ ராஷ்ட்ரம் ந
பரிதாவதி।।2.100.18।।

நீ தனி ஒருவனாகச் சிந்தித்து முடிவு எடுக்காமல் இருக்கிறாயா? ஏராளமானவர்களை வைத்துக்கொணடு முக்கிய முடிவுகள் எடுக்காமல் இருக்கிறாயா? உன்னால் தக்க ஆலோசகர்களுடன் கலந்து ஆலோசிக்கப்பட்ட முடிவுகள் நாட்டில் உரிய காலத்திற்கு முன் கசிந்துவிடாமல் இருக்கிறதா? (திட்டங்களின் ரகசியம் பாதுகாக்கப்படுகிறதா?)

141.

कच्चिदर्थं विनिश्चित्य लघुमूलं महोदयम्।
क्षिप्रमारभसे कर्तुं न दीर्घयसि राघव।।2.100.19।।

கச்சிதர்தம் விநிஶ்சித்ய லகுமூலம் மஹோதயம்.
க்ஷிப்ரமாரபஸே கர்தும் ந தீர்கயஸி ராகவ।।2.100.19।।

பரதா! எளிய முறையில் ஆரம்பிக்கப்பட்டு பெரும் பயனை தரக்கூடிய செயல்களை நிச்சயித்தபின், உடனே செயல்படுத்துகிறாயா? காலதாமதம் செய்யவில்லை அல்லவா?

142.

कच्चित्सहस्रान्मूर्खाणामेकमिच्छसि पण्डितम्।
पण्डितो ह्यर्थकृच्छ्रेषु कुर्यान्निःश्रेयसं महत्।।2.100.22।।

கச்சித் ஸஹஸ்ராந் மூர்காணாமேகமிச்சஸி பண்டிதம்.
பண்டிதோ ஹ்யர்தக்ருச்ச்ரேஷு குர்யாந் நிஶ்ரேயஸம் மஹத்।।2.100.22।।

அறிவில்லாத பலரைக் காட்டிலும், புத்திகூர்மையுடைய ஒருவரை அருகில் வைத்துக் கொள்ள விரும்புகிறாய் தானே? ஒரு காரியத்தைச் செய்யும் போது ஏற்படும் இடுக்கண்களை ஒரு புத்திசாலியால்தான் களைந்து நன்மையைச் செய்ய முடியும்.

143.

कच्चिन्नोग्रेण दण्डेन भृशमुद्वेजित प्रजम्।
राष्ट्रे तवावजानन्ति मन्त्रिणःकैकयीसुत।।2.100.27।।

கச்சிந்நோக்ரேண தண்டேந ப்ருஶமுத்வேஜிதப்ரஜம்.
ராஷ்ட்ரே தவாவஜானந்தி மந்த்ரிண꞉
கைகயீஸுத।।2.100.27।।

கைகேயியின் மைந்தனே! குற்றத்திற்குப் பொருந்தாத கடுமையான தண்டனையைப் பெற்று குடிமக்கள் அமைச்சர்களை மதிக்காமலில்லை அல்லவா.

144.

कच्चित्त्वां नावजानन्ति याजकाः पतितं यथा।
उग्रप्रतिग्रहीतारं कामयानमिव स्त्रियः।।2.100.28।।

கச்சித்த்வாம் நாவஜாநந்தி யாஜகா: பதிதம் யதா.
உக்ரப்ரதிக்ரஹீதாரம் காமயாநமிவ ஸ்த்ரிய:।।2.100.28।।

தவறான வழிகளில் பொருள் சேர்த்து, யாகம் செய்ய விரும்புகிறவனை ரித்விக்குகள் எவ்வாறு ஒதுக்குவார்களோ; நற்குலப் பெண்மணிகள், தங்களை காம இச்சையுடன் அணுகிவரும் ஆண்களை எப்படி அவமதிப்பார்களோ, அதுபோல குடிமக்களை துன்புறுத்தி, அவர்கள் செல்வத்தைப் பறித்துக் கொள்பவனாய் உன்னிடம் குற்றம் கண்டு, குடிமக்கள் உன்னை அவமதிக்காமல் இருக்கிறார்களா?

145.

उपायकुशलं वैद्यं भृत्यसंदूषणेरतम्।
शूरमैश्वर्यकामंच यो न हन्ति स हन्यते।।2.100.29।।

உபாயகுஶலம் வைத்யம் ப்ருத்யஸம்தூஷணே ரதம்.
ஶூரமைஶ்வர்யகாமம் ச யோ ந ஹந்தி ஸ
ஹந்யதே।।2.100.29।।

(சாம-தான-பேத-தண்டம் என்ற) உபாயங்களைப் பிரயோகிப்பதில் வல்லவனும், பிறரை வஞ்சிக்கும் முறைகளைக் கூறும் நூல்களைக் கற்றவனும், அரசனுக்கு அந்தரங்கமான பணியாளர்கள் மேல் பழி சுமத்துபவனும், மன்னனுக்கு இன்னல் விளைவிப்பதில் சூரனும், அரசாட்சியைக் கைப்பற்றும் தீய விருப்பம் உடையவனுமான ஒருவனைக் கொல்லாமல் விட்டால், அந்த அரசனே (அந்த கயவனால்) சிறைப்படுத்தப்படுவான்.

146.

कच्चिद्धृष्टश्च शूरश्च मतिमान्धृतिमान्शुचिः।
कुलीनश्चानुरक्तश्च दक्षस्सेनापतिः कृतः।।2.100.30।।

கச்சித்த்ருஷ்டஶ்ச ஶூரஶ்ச மதிமாந் த்ருதிமாந் ஶுசி:.
குலீநஶ்சாநுரக்தஶ்ச தக்ஷஸ்ஸேநாபதி: க்ருத:।।2.100.30।।

எப்போதும் மனநிறைவுடன் இருப்பவனும், சூர-வீரனும், அறிவுள்ளவனும், தைரியம், தூய்மை உடையவனும், நற்குடித்தோன்றலும், உன்னிடத்தில் விசுவாசம் உள்ளவனும், காரியங்களைச் செய்வதில் திறமையுள்ளவனுமான ஒருவனை படைத்தலைவனாக நியமித்திருக்கிறாயா?

147.

कच्चिज्जानपदो विद्वान्दक्षिणः प्रतिभानवान्।
यथोक्तवादी दूतस्ते कृतो भरत पण्डितः।।2.100.35।।

கச்சிஜ்ஜாநபதோ வித்வாந் தக்ஷிண: ப்ரதிபாநவாந்.
யதோக்தவாதீ தூதஸ்தே க்ருதோ பரத பண்டித:।।2.100.35।।

பரதனே! நீ, ராஜதூதர் என்ற பொறுப்பில் யாரை நியமித்திருக்கிறாயோ, அவர் உள் நாட்டில் பிறந்தவர்தானே? பிறருடைய எண்ணங்களை அறியக் கூடியவராகவும், செயல்களைச் செய்வதில் சாமர்த்தியம் உடையவராகவும், சமயத்திற்குத் தக்கபடி பதில் சொல்லக் கூடியவராகவும், நீ சொல்லியனுப்பியதை நீ சொன்னபடியே சொல்பவராகவும், அவர் சொல்லியதை சொன்னபடியே உன்னிடம் தெரிவிப்பராகவும், நல்லது-கெட்டது என்ற விவேகம் உடையவராகவும் இருக்கிறாரல்லவா?

148.

कच्चिन्न लौकायतिकान्ब्राह्मणांस्तात सेवसे।।
अनर्थकुशलाह्येते बालाः पण्डितमानिनः।।2.100.38।।

கச்சிந்ந லௌகாயதிகாந் ப்ராஹ்மணாம்ஸ் தாத ஸேவஸே।।
அநர்தகுஶலா ஹ்யேதே பாலா꞉ பண்டிதமாநிந꞉।।2.100.38।।

செல்வமே! முறைப்படி வேதம் பயிலாத, பகவத் பக்தி இல்லாத, நாஸ்திக (வைதிக நெறிகளுக்கு புறம்பான வழிகளில் செல்கிற) அந்தணர்களுடன் சேராமல் இருக்கிறாயா? ஏனென்றால், தங்களுக்கு எல்லாம் தெரியும் என்று கருதிக் கொண்டிருக்கும் இந்த அறிவிலிகள் தீமை விளைவிப்பதில் சாமர்த்தியமுள்ளவர்கள்.

149.

धर्मशास्त्रेषु मुख्येषु विद्यमानेषु दुर्बुधाः।
बुद्धिमान्वीक्षिकीं प्राप्य निरर्थं प्रवदन्ति ते।।2.100.39।।

தர்மஶாஸ்த்ரேஷு முக்யேஷு வித்யமாநேஷு துர்புதா꞉।
புத்திமாந்வீக்ஷிகீம் ப்ராப்ய நிரர்தம் ப்ரவதந்தி தே।।2.100.39।।

உயர்ந்த கருத்துக்களைப் போதிக்கும் தரும சாஸ்திரங்கள் இருக்கும்போது, மேற்சொன்ன அற்ப புத்தியுள்ள பண்டிதர்கள், வெறும் தர்க்கவாதங்களையே முன்வைத்து இக-பர சுகங்களுக்குப் பயன்படாத விஷயங்களையே பேசுவார்கள்.

150.

कच्चित्ते दयितास्सर्वे कृषिगोरक्षजीविनः।
वार्तायां संश्रितस्तात लोकोहि सुखमेधते।।2.100.47।।

கச்சித்தே தயிதாஸ்ஸர்வே க்ருஷிகோரக்ஷஜீவிந:.
வார்தாயாம் ஸம்ஶ்ரிதஸ்தாத லோகோ ஹி
ஸுகமேததே।।2.100.47।।

விவசாயம் செய்பவர்கள், பசுக்களை (ஆடு-மாடுகளை) பராமரித்து வாழ்க்கை நடத்துபவர்கள்- இவர்கள் உன்னிடம் அன்புடன் இருக்கிறார்களா? குழந்தாய்! வாணிபம் செய்யும் வர்த்தக மக்கள் சுகமாக வாழ்கிறார்களா? அப்போதுதான் இவ்வுலகம் சுகமாகவும்,

151.

कच्चिन्न सर्वे कर्मान्ताःप्रत्यक्षास्तेऽविशङ्कया।
सर्वेवा पुनरुत्सृष्टा मध्यमेवात्रकारणम्।।2.100.52।।

கச்சிந்ந ஸர்வே கர்மாந்தா: ப்ரத்யக்ஷாஸ்தேவிசங்கயா.
ஸர்வே வா புநருத்ஸ்ருஷ்டா மத்யமேவாத்ர
காரணம்।।2.100.52।।

வெகு சுலபமாக உன் வேலைக்காரர்கள் உன்னை நெருங்கிப் பார்க்க முடியாமல் வைத்திருக்கிறாயா? (எளிதாகப் பார்க்கும் உரிமையைக் கொடுத்தால் மரியாதையைக் குறைத்து விடுவார்கள்.) அதுபோல உன்னைப் பார்க்க முடியாமலும் இருக்கக்கூடாது. இரண்டிற்கும் நடுவான ஒரு நிலையை அனுசரிக்கவேண்டும்.

152.

आयस्ते विपुलःकच्चित्कच्चिदल्पतरो व्ययः।
अपात्रेषु न ते कच्चित्कोशो गच्छति राघव।।2.100.54।।

ஆயஸ்தே விபுல: கச்சித் கச்சிதல்பதரோ வ்யய:.
அபாத்ரேஷு ந தே கச்சித் கோஷோ கச்சதி
ராகவ।।2.100.54।।

பரதா! உன் அரசாங்க வரவு அதிகமாகவும் செலவு
குறைவாகவும் இருக்கிறதா? உன்னுடைய செல்வம்
தகாதவர்களிடம் போகாமலிருக்கிறதா?

153.

यानि मिथ्याभिशस्तानां पतन्त्यश्रूणि राघव।
तानि पुत्रान्पशून्घ्नन्ति प्रीत्यर्थमनुशासतः।।2.100.59।।

யாநி மித்யாபிஶஸ்தாநாம் பதந்த்யஶ்ரூணி ராகவ.
தாநி புத்ராந்பஶூந்க்நந்தி ப்ரீத்யர்தமநுஶாஸத:।।2.100.59।।

பரதா! குற்றம் செய்யாதவர்கள் தவறாக
தண்டிக்கப்பட்டால் அவர்கள் கண்களிலிருந்து சிந்தும்
கண்ணீர் தன் சுகத்தையே பெரிதாகக் கருதி ஆட்சி
செய்பவனுடைய புதல்வர்களையும் பசுக்களையும்
(செல்வத்தையும்) அழித்துவிடும்.

154.

कच्चिद्गुरूंश्च वृद्धांश्च तापसान्देवतातिथीन्।
चैत्यांश्च सर्वान्सिध्दार्थान्ब्राह्मणांश्च नमस्यसि।।2.100.61।।

கச்சித்குரூம்ஶ்ச வ்ருத்தாம்ஶ்ச தாபஸாந் தேவதாதிதீந்.
சைத்யாம்ஶ்ச ஸர்வாந்ஸித்தார்தாந் ப்ராஹ்மணாம்ஶ்ச
நமஸ்யஸி।।2.100.61।।

ஆசார்யர்களையும் முதியவர்களையும் தவம் செய்பவர்களையும் தேவதைகளையும் அதிதிகளையும் தெய்வம் வசிக்கும் (அரசு, வேம்பு, போன்ற) மாபெரும் மரங்களையும், யோகமகிமையால் இவ்வுலக பந்தத்திலிருந்து விடுபட்ட பெரியோர்களையும் அந்தணர்களையும் வணங்குகிறாயல்லவா?

155.

कच्चिदर्थेन वा धर्ममर्थं धर्मेण वा पुनः।
उभौ वा प्रीतिलोभेन कामेन च न बाधसे।।2.100.62।।

கச்சிதர்தேந வா தர்மமர்தம் தர்மேண வா புந꞉.
உபௌ வா ப்ரீதிலோபேந காமேந ச ந பாதஸே।।2.100.62।।

தர்மத்தை சம்பாதிக்க வேண்டிய காலத்தில் தர்மத்தைச் செய்யவேண்டும்; செல்வம் வாழ்க்கைக்கு அவசியமானால், அதனையும் உரிய முறையிலும், காலத்திலும் சேர்க்க வேண்டும். அதேபோல் காம சுகத்திற்கு என்று விதிக்கப்பட்டுள்ள காலங்களில் மட்டுமே சிற்றின்பத்தில் ஈடுபடவேண்டும். நீ தர்ம, அர்த்தங்களை மறந்து காமத்திலேயே இச்சை கொண்டு, அதிலேயே ஈடுபடாமல் இருக்கிறாயா?

156.

कच्चित्ते ब्राह्मणाश्शर्म सर्वशास्त्रार्थकोविदाः।
आशंसन्ते महाप्राज्ञ पौरजानपदैस्सह।।2.100.64।।

கச்சித்தே ப்ராஹ்மணா ஶர்ம
ஸர்வசாஸ்த்ரார்தகோவிதா:.
ஆசம்ஸந்தே மஹாப்ராஜ்ஞ
பௌரஜாநபதைஸ்ஸஹ।।2.100.64।।

உன் தேசத்திலுள்ள, அனைத்து அறநூல்களிலும் வல்லவர்களான பிராம்மணர்களும் பட்டணத்து மக்களும் நாட்டுப்புறங்களில் வசிப்பவர்களும் உன் நலனைக்கோரி பிரார்த்தனை செய்கிறார்களல்லவா?

157.

मङ्गलाद्यप्रयोगं च प्रत्युत्थानं च सर्वतः।
कच्चित्त्वं वर्जयस्येतान्राजदोषांश्चतुर्दश।।2.100.67।।

மங்கலாத்யப்ரயோகம் ச ப்ரத்யுத்தாநம் ச ஸர்வத:.
கச்சித்வம்
வர்ஜயஸ்யேதாந்ராஜதோஷாம்ஶ்சதுர்தஶ।।2.100.67।।

மங்கள காரியங்களை செய்யாமலிருப்பது, எல்லா பகைவர்களுடனும் ஒரே நேரத்தில் போரைத் தொடங்குவது இது போன்ற பதிநான்கு குற்றங்களையும் நீ விலக்கியிருக்கிறாயா?

158.

शाश्वतोऽयं सदा धर्मःस्थितोऽस्मासु नरर्षभ।
ज्येष्ठे पुत्रे स्थिते राजन् न कनीयान्भवेन्नृपः।।2.101.2।।

ஶாஶ்வதோயம் ஸதா தர்ம: ஸ்திதோஸ்மாஸு நரர்ஷப.
ஜ்யேஷ்டேபுத்ரே ஸ்திதே ராஜந் ந கநீயாந்
பவேந்ந்ருப:।।2.101.2।।

புருஷோத்தமனே! அரசனே! நம்முடைய பரம்பரையில் மூத்த புதல்வன் இருக்கும்போது இளையவன் இளவரசனாக ஆவதில்லை என்ற நெறி நிரந்தரமாக (தொடக்க நாட்களிலிருந்தே) இருந்து வருகிறது.

159.

श्रुतिस्तु खल्वियं सत्या लौकिकी प्रतिभाति मे।
यदन्नःपुरुषो भवति तदन्नास्तस्य देवताः।।2.103.15।।

ஶ்ருதிஸ்து கல்வியம் ஸத்யா லௌகிகீ ப்ரதிபாதி மே.
யதந்ந: புருஷோ பவதி ததந்நாஸ்தஸ்ய
தேவதா:।।2.103.15।।

ஒரு மனிதன் எத்தகைய உணவைப் புசிக்கிறானோ, அதே உணவை அவனது தெய்வங்களுக்கும் படைக்கிறான். என்ற உலகியல் பழமொழி, நிச்சயமாக உண்மைதான் என்று எனக்குத் தோன்றுகிறது.

160.

एतत् ते राजशार्दूल विमलं तोयमक्षयम् ।
पितृलोकगतस्याद्य मद्दतमुपतिष्ठतु ॥ (1.103.27)

ஏதத் தே ராஜசார்தூல விமலம் தோயமக்ஷயம் |
பித்ருலோககதஸ்யாத்ய மத்தத்தமுபதிஷ்டது || (1.103.27)

(ராமர் தசரதருக்கு அந்திம கிரியைகள் செய்யும்போது)
அரசருள் புலியே, இன்று நான் கொடுக்கும் இந்த
சுத்தமான ஜலம் பித்ருலோகத்தை அடைந்த
தங்களுக்குக் குறைவின்றி கிடைக்கட்டும்.

161.

सुजीवं नित्यशस्तस्य यः परैरुपजीव्यते।
राम तेन तु दुर्जीवं यःपरानुपजीवति।।2.105.7।।

ஸுஜீவம் நித்யஶஸ்தஸ்ய ய: பரைருபஜீவ்யதே.
ராம தேந து துர்ஜீவம் ய: பராநுபஜீவதி।।2.105.7।।

ராமா! எவனுடைய உதவியை நாடிவந்து மக்கள்
வாழ்க்கை நடத்துகிறார்களோ, அவனுடைய
வாழ்க்கையே உத்தமமானது; எவனொருவன் பிறருடைய
ஆதரவில் வாழ்க்கை நடத்துகிறனோ, அவனுடைய
வாழ்வு கஷ்டமானது.

162.

नाऽत्मनः कामकारोऽस्ति पुरुषोऽयमनीश्वरः।
इतश्चेतरतश्चैनं कृतान्तःपरिकर्षति।।2.105.15।।

நாऽத்மந: காமகாரோஸ்தி புருஷோயமநீஶ்வர:.
இதஶ்சேதரதஶ்சைநம் க்ருதாந்த: பரிகர்ஷதி।।2.105.15।।

(ராமர் பரதனிடம்) எந்த மனிதனும் தன் இஷ்டம்போல் நடக்க முடியாது; அவனுக்கு அந்த உரிமை இல்லை; வினைப்பயன் அவனை இங்குமங்குமாகத் தூக்கி அலைக்கிறது.

163.

सर्वे क्षयान्ताः निचयाः पतनान्ता समुच्छ्रयाः।
संयोगा विप्रयोगान्ता मरणान्तंच जीवितम्।।2.105.16।।

ஸர்வே க்ஷயாந்தா: நிசயா: பதநாந்தா ஸமுச்ச்ரயா:.
ஸம்யோகா விப்ரயோகாந்தா மரணாந்தம் ச ஜீவிதம்।।2.105.16।।

சேர்த்து வைக்கப்பட்ட செல்வங்கள் எல்லாம் முடிவில் அழிந்துதான் போகும்; பெரும் பதவியில் இருப்பவர்கள் கீழே விழுகிறார்கள். சேர்க்கை (மனைவி-மக்கள்-நட்பு-உறவு) எல்லாம் இறுதியில் பிரிந்துதான் போகும்; உயிரின் முடிவு மரணம்.

164.

यथा फलानां पक्वानां नान्यत्र पतनाद्भयम्।
एवं नरस्य जातस्य नान्यत्र मरणाद्भयम्॥2.105.17॥

யதா பலாநாம் பக்வாநாம் நாந்யத்ர பதநாத்பயம்.
ஏவம் நரஸ்ய ஜாதஸ்ய நாந்யத்ர
மரணாத்பயம்॥2.105.17॥

மரத்தில் நன்றாக பழுத்துவிட்ட பழங்களுக்கு தாம் விழுந்துவிடுவோமோ என்பதைத் தவிர வேறு பயமில்லை; அது போல பிறவி எடுத்துவிட்ட மனிதனுக்கு மரணம் வந்துவிடுமே என்பதைக் காட்டிலும் வேறு பயமில்லை.

165.

सहैव मृत्युर्व्रजति सह मृत्युर्निषीदति।
गत्वा सुदीर्घमध्वानं सह मृत्युर्निवर्तते॥2.105.22॥

ஸஹைவ ம்ருத்யுர்வ்ரஜதி ஸஹ ம்ருத்யுர்நிஷீததி.
கத்வாஸுதீர்கமத்வாநம் ஸஹ
ம்ருத்யுர்நிவர்ததே॥2.105.22॥

காலன், (பிராணிகளின்) கூடவே நடக்கிறான்; காலன், கூடவே உட்காருகிறான்; காலன், கூடவே வெகுதூரம் வரை சென்று திரும்புகிறான்.

166.

नन्दन्त्युदित आदित्ये नन्दन्त्यस्तमितेऽहनि।
आत्मनो नावबुद्ध्यन्ते मनुष्या
जीवितक्षयम्।।2.105.24।।

நந்தந்யுதித ஆதித்யே நந்தந்த்யஸ்தமிதேஹனி
ஆத்மநோ நாவபுத்யந்தே மநுஷ்யா
ஜீவிதக்ஷயம்।।2.105.24।।

சூரியன் உதயமானவுடன் மனிதன் மகிழ்ச்சி அடைகிறான். சூரியன் மறைந்த பின்னும் மகிழ்கிறான். ஆனால் (அந்தோ, பரிதாபம்) தம் வாழ்வின் ஒரு நாள் குறைந்துவிட்டதை மனிதர்கள் உணர்ந்து கொள்வதில்லை.

167.

यथा काष्ठंच काष्ठंच समेयातां महार्णवे।
समेत्यच व्यपेयातां कालमासाद्य कञ्चन।।2.105.26।।

யதா காஷ்டம் ச காஷ்டம் ச ஸமேயாதாம்
மஹார்ணவே.
ஸமேத்ய ச வ்யபேயாதாம் காலமாஸாத்ய
கஞ்சந।।2.105.26।।

பெருங்கடலில் (தனித்தனியே மிதந்து கொண்டிருக்கும்) இரண்டு மரக்கட்டைகள் ஒரு சமயத்தில் ஒன்று சேரும்; கொஞ்சநேரத்தில் கூடியிருந்த அவை பிரிந்து சென்றுவிடும்

168.

एवं भार्याश्च पुत्राश्च ज्ञातयश्च धनानिच।
समेत्य व्यवथावन्ति ध्रुवोह्येषां विनाभवः।।2.105.27।।

ஏவம் பார்யாஸ்ச புத்ராஸ்ச ஜ்ஞாதயஸ்ச தநாநி ச.
ஸமேத்ய வ்யவதாவந்தி த்ருவோ ஹ்யேஷா
விநாபவ:।।2.105.27।।

அதுபோலவே, மனைவி-புதல்வர்-உறவினர்-செலவங்கள் எல்லாம் ஒன்று சேர்ந்திருந்து பிரிந்துவிடுகின்றன. இந்த பிரிவு நிச்சயம் நடைபெறவே செய்கிறது.

169.

न मया शासनं तस्य त्यक्तुं न्याय्यमरिन्दम।
तत्त्वयाऽपि सदा मान्यं सवै बन्धुस्स नः पिता।।2.105.42।।

ந மயா ஷாஸநம் தஸ்ய த்யக்தும் ந்யாய்ய மரிந்தம.
தத்த்வயாऽபி ஸதா மாந்யம் ஸ வை பந்துஸ் ஸ ந:
பிதா।।2.105.42।।

எதிரிகளை அடக்குபவனே! அவருடைய கட்டளையை மீறுவது என்பது என்னால் ஆகாதது. அவருடைய கட்டளை உன்னாலும் மதிக்கத்தக்கதே. ஏனென்றால், அவர் நம்முடைய நலன் விரும்பி; உயிர் கொடுத்த தந்தையும்கூட.

170.

यथा मृतस्तथा जीवन्यथाऽसति तथा सति।
यस्यैष बुद्धिलाभस्स्यात्परितप्येत केन सः।।2.106.4।।

யதா ம்ருத ஸ்ததா ஜீவந் யதாஸதி ததா ஸதி.
யஸ்யைஷ புத்திலாபஸ் ஸ்யாத்பரிதப்யேத கேந ஸ:।।2.106.4।।

(பரதன் ராமரிடம்) மரணமடைந்து விட்டவனுக்கு (தான் (முன்னே பெற்றிருந்த) உயிரோடிருந்த சரீரத்துடன் எவ்வாறு எந்தத் தொடர்பும் இல்லையோ, அதுபோலவே உயிரோடிருக்கும் போதும் சம்பந்தம் இலை என்ற (ஞானத்தை) அடைந்துவிட்டவன்; மற்றும், இல்லாதது போல் இருக்கின்ற பொருளின்மீதும் விருப்பு வெறுப்பு இல்லாதவன் எவனோ, அந்த விவேகியான புருஷனுக்கு துயரம் என்பது எவ்வாறு ஏற்படும்?

171.

परावरज्ञो यश्च स्याद्यथा त्वं मनुजाधिप।
स एव व्यसनं प्राप्य न विषीदितुमर्हति।।2.106.5।।

பராவரஜ்ஞோ யஶ்ச ஸ்யாத்யதா த்வம் மநுஜாதிப.
ஸ ஏவம் வ்யஸநம் ப்ராப்ய ந
விஷீதிதுமர்ஹதி।।2.106.5।।

மக்கள் தலைவரே! (ஸத்-அஸத் என்ற விவேகத்தைக் கொண்டுள்ள) தங்களைப் போன்று (காட்டில் வசிக்கும்) இதுபோன்ற துன்பத்தை அடைந்தாலும், ஞானிக்கு ஒப்பானவர்கள் மனம் வருந்தமாட்டார்கள்.

172.

पितुर्हि समतिक्रान्तं पुत्रोयस्साधु मन्यते।
तदपत्यं मतंलोके विपरीतमतोऽन्यथा।।2.106.15।।

பிதுர்ஹி ஸமதிக்ராந்தம் புத்ரோ யஸ்ஸாது மந்யதே.
ததபத்யம் மதம் லோகே விபரீதமதோந்யதா।।2.106.15।।

அறநெறியிலிருந்து வழுவி, தந்தை செய்ததை எந்தப் புதல்வன், உரிய நடவடிக்கை எடுத்து தருமநெறிக்குக் கொண்டுவருகிறானோ, அவனே நல்ல புதல்வன் என்று உலகத்தாரால் மதிக்கப்படுகிறான். அப்படி செய்யாத புத்திரன் வேறுவிதமாக (அதர்மத்திற்கு ஆதரவு அளிப்பவனாகக்) கருதப்படுவான்.

173.

कश्च प्रत्यक्षमुत्सृज्य संशयस्थमलक्षणम्।
आयतिस्थं चरेद्धर्मं क्षत्रबन्धुरनिश्चितम्।।2.106.20।।

கஶ்ச ப்ரத்யக்ஷமுத்ஸ்ருஜ்ய ஸம்ஷயஸ்த மலக்ஷணம்.
ஆயதிஸ்தம் சரேத் தர்மம் க்ஷத்ரபந்துரநிஶ்சிதம்।।2.106.20।।

கண்களால் காணக்கூடியதை விட்டுவிட்டு (நல்லாட்சி செய்து மக்கள் சுகமாக இருப்பதைக் கண்ணால் கண்டு மனத்திருப்தி அடைவதைவிட்டு), (இந்த தர்மத்தை இப்படிச் செய்வது சரியா, தவறா என்ற) சந்தேகத்திற்கு இடமளிப்பதும், தற்சமயம் தேவையில்லாததும், எதிர்காலத்தில் நல்ல பயனைக் கொடுக்கும் என்று கூறப்படுவதும், உறுதியாக பின்பற்றவே வேண்டும் என்றும் விதிக்கப்படாத ஒரு வழியை (காட்டில் தவ வாழ்க்கை) பாமரனான ஒரு க்ஷத்திரியன் கூட அனுஷ்டிக்கத் துணியமாட்டான்.

174.

चतुर्णामाश्रमाणां हि गार्हस्थ्यं श्रेष्ठमुत्तमम्।
आहुर्धर्मज्ञ धर्मज्ञास्तंकथं त्यक्तुमर्हसि।।2.106.22।।

சதுர்ணாமாஶ்ரமாணாம் ஹி கார்ஹஸ்த்யம் ஶ்ரேஷ்ட முத்தமம்.
ப்ராஹுர்தர்மஜ்ஞ தர்மஜ்ஞாஸ்தம் கதம் த்யக்து
மர்ஹஸி।।2.106.22।।

நான்கு வகையான வாழ்க்கை நிலைகளில் (ஆசிரமங்களில்) கிருஹஸ்த தர்மம் -விவாகம் செய்து கொண்டு மனைவி, மக்களுடன் வாழும் நிலை- தான் உயர்ந்தது என்று அறநூல் வல்லுநர்கள் கூறுகிறார்கள். தாங்கள் தர்மம் அறிந்தவர். எனவே (குடும்ப வாழ்க்கை என்னும்) அந்த தர்மத்தைத் தாங்கள் துறக்கலாகாது. (ஒரு முனிவரைப் போல தவ வாழ்க்கையை ஏற்கக்கூடாது)

175.

पुन्नाम्नो नरकाद्यस्मात्पितरं त्रायते सुतः।
तस्मात्पुत्र इति प्रोक्तःपितॄन्यः पाति सर्वतः।।2.107.12।।

புந்நாம்நோ நரகாத் யஸ்மாத் பிதரம் த்ராயதே ஸுத꞉.
தஸ்மாத் புத்ர இதி ப்ரோக்த꞉ பித்ரூந் ய꞉ பாதி
ஸர்வத꞉।।2.107.12।।

புதல்வன் என்பவன், புத் என்னும் நரகத்திலிருந்து தந்தையைக் காப்பாற்றுவதாலும், முன்னோர்களை எல்லாவிதத்திலும் பாதுகாப்பதாலும், அவன் புத்திரன் என்று அழைக்கப்படுகிறான்.

## 176.

एष्टव्या बहवःपुत्रा गुणवन्तो बहुश्रुताः।
तेषां वै समवेतानामपि कश्चिद्गयां व्रजेत्।।2.107.13।।

ஏஷ்டவ்யா பஹவ: புத்ரா குணவந்தோ பஹுஶ்ருதா:.
தேஷாம் வை ஸமவேதாநாமபி கஶ்சித்கயாம்
வ்ரஜேத்।।2.107.13।।

குணசாலிகளான பல்கலை அறிவு பெற்ற அனேக மைந்தர்களைப் பெறவேண்டும் என்று ஆசைப்பட வேண்டும். பெற்றெடுத்த பல புத்திரர்களில் எவனேனும் ஒருவனாவது கயைக்குச் செல்லமாட்டானா?

## 177.

कुलीनमकुलीनं वा वीरं पुरुषमानिनम् ।
चारित्रमेव व्याख्याति शुचिं वा यदि वाशुचिम् ॥ (2.109.4)

குலீனமகுலீனம் வா வீரம் புருஷமானினம்.
சாரித்ரமேவ வ்யாக்யாதி ஶுசிம் வா யதி வாஶுசிம்.
(2.109.4)

ஒருவனுடைய நடத்தையே காட்டிக் கொடுக்கிறது - அவன் நற்குலத்தில் பிறந்தவனா அல்லது இழிவான குலத்தில் பிறந்தவனா, வீரனா அல்லது வீரமில்லாது தன்னை ஆணாகக் கொண்டாடிக் கொண்டிருப்பவனா, தூய்மையானவனா அல்லது மாசு நிறைந்தவனா என்பதை.

178.

सत्यमेवेश्वरो लोके सत्ये धर्मः सदाश्रितः ।
सत्यमूलानि सर्वाणि सत्यान्नास्ति परं पदम् ॥ (2.109.13)

ஸத்யமேவேஶ்வரோ லோகே ஸத்யே தர்ம: ஸதாஶ்ரித:.
ஸத்யமூலானி ஸர்வாணி ஸத்யான்நாஸ்தி பரம் பதம்.
(2.109.13)

உலகினில் ஸத்தியமே ஈஸ்வரன்; எப்பொழுதும் ஸத்தியத்தின் ஆதாரத்திலேயே தர்மம் நிலைத்திருக்கிறது. எல்லாவற்றிற்கும் ஸத்தியமே ஆணிவேர்; ஸத்தியத்தைவிட உயர்ந்தது அடையவேண்டியது எதுவுமே இல்லை.

179.

दत्तमिष्टं हुतंचैव तप्तानिच तपांसिच।
वेदास्सत्यप्रतिष्ठानास्तस्मात्सत्यपरो भवेत्।।2.109.14।।

தத்தமிஷ்டம் ஹுதம் சைவ தப்தாநி ச தபாம்ஸி ச.
வேதாஸ் ஸத்யப்ரதிஷ்டாநாஸ் தஸ்மாத் ஸத்யபரோ பவேத்।।2.109.14।।

தானம், வேள்வி, ஹோமம், கடுமையான கட்டுப்பாடுகளுடன் செய்யப்பட்ட தவம், மற்றும் வேதங்களும் சத்தியத்தின் மேல் நிற்கின்றன. ஆகவே, மனிதன் சத்தியத்தையே முற்றிலுமாக அனுசரிக்கக் கடவன்.

180.

नैव लोभान्नमोहाद्वा न ह्यज्ञानात्तमोऽन्वितः।
सेतुं सत्यस्य भेत्स्यामि गुरोस्सत्यप्रतिश्रवः॥2.109.17॥

நைவ லோபாந்ந மோஹாத்வா ந
ஹ்யஜ்ஞாநாத்தமோந்வித:.
ஸேதும் ஸத்யஸ்ய பேத்ஸ்யாமி குரோஸ்
ஸத்யப்ரதிஶ்ரவ:.॥2.109.17॥

தந்தைக்கு அளித்த வாக்கைப் பேராசையாலோ, மதிமயக்கத்தாலோ, தெள்ளிய அறிவின்மையாலோ, அறியாமையால் மதியிழந்தோ, சத்திய வரம்பை மீறி நடக்க மாட்டேன்.

181.

असत्यसन्धस्य सतश्चलस्यास्थिरचेतसः।
नैव देवा न पितरः प्रतीच्छन्तीति नःश्रुतम्॥2.109.18॥

அஸத்யஸந்தஸ்ய ஸதஶ் சலஸ்யாஸ்திர சேதஸ:.
நைவ தேவா ந பிதர:. ப்ரதீச்சந்தீதி ந:. ஶ்ருதம்॥2.109.18॥

அசத்தியம் பேசுகிறவனும், நிலையான அறச்சிந்தனை இல்லாதவனும், நற்செயல்களில் தடுமாற்றமுடையவனுமான ஒருவனால் அளிக்கப்படும் நைவேத்தியம், பிண்டம் ஆகியவற்றை முறையே தேவதைகளும் பித்ருக்களும் ஏற்கமாட்டார்கள் என்று, நாங்கள் (குருமுகமாக) கேட்டிருக்கிறோம்.

182.

कायेन कुरुते पापं मनसा सम्प्रधार्यच।
अनृतं जिह्वया चाह त्रिविधं कर्मपातकम्।।2.109.21।।

காயேந குருதே பாபம் மநஸா ஸம்ப்ரதார்ய ச.
அந்ருதம் ஜிஹ்வயா சாஹ த்ரிவிதம்
கர்மபாதகம்।।2.109.21।।

உடலினால் பாவத்தைச் செய்யும் மனிதன் அதை மனதில் தீர்மானிக்கிறான். நாவினால் பொய் பேசுகிறான். ஆக, பாவச்செயல் என்பது (மனம், வாக்கு, காயம் என்ற) மூன்று வகையாலும் செய்யப்படுகிறது.

183.

भूमिःकीर्तिर्यशो लक्ष्मीः पुरुषं प्रार्थयन्ति हि।
सत्यं समनुवर्तन्ते सत्यमेव भजेत् ततः ।।2.109.22।।

பூமி: கீர்திர்யஶோ லக்ஷ்மீ: புருஷம் ப்ரார்தயந்தி ஹி.
ஸத்யம் ஸமனுவர்தந்தே ஸத்யமேவ பஜேத் தத:।।2.109.22।।

பூதேவி, இகலோகப் புகழ், மறைந்த பின் நிலைத்து நிற்கும் புகழ், செல்வத் திருமகள்- இவையெல்லாம் சத்தியம் பேசும் புருஷனையே அடைய விரும்புகின்றன.; மேலும், சான்றோர்கள் சத்தியத்தையே கடைப்பிடிக்கிறர்கள். ஆகவே மனிதன் எப்போதும் சத்தியத்தையே அனைத்திலும் மேலாகக் கொள்ளவேண்டும்.

184.

कर्मभूमिमिमां प्राप्य कर्तव्यं कर्म यच्छुभम्।
अग्निर्वायुश्च सोमश्च कर्मणां फलभागिनः।।2.109.28।।

கர்மபூமிமிமாம் ப்ராப்ய கர்தவ்யம் கர்ம யச்சுபம்.
அக்நிர்வாயுஶ்ச ஸோமஶ்ச கர்மணாம்
பலபாகிந:।।2.109.28।।

கர்மபூமியான இந்த நாட்டில் பிறந்திருக்கும் நாம் புண்ணிய கர்மங்களையே செய்ய வேண்டும். ஏனென்றால், அக்னி, வாயு, சந்திரன் ஆகியோர் தத்தம் கர்மாக்களின் பயனையே (அந்தந்த பதவியை அடைந்ததன் மூலம்) அனுபவித்து வருகிறார்கள்.

185.

सत्यंच धर्मंच पराक्रमंच भूतानुकम्पां प्रियवादितां च।
द्विजातिदेवातिथिपूजनंच पन्थानमाहुस्त्रिदिवस्य सन्तः।।2.109.31।।

ஸத்யம் ச தர்மம் ச பராக்ரம் ச பூதாநுகம்பாம் ப்ரியவாதிதாம் ச.
த்விஜாதிதேவாதிதிபூஜநம் ச பந்தாநமாஹுஸ்த்ரிதிவஸ்ய
ஸந்த:।।2.109.31।।

சத்தியம், தர்மம், போரில் புறமுதுகு காட்டாத வீரம், அனைத்துப் பிராணிகளிடத்திலும் கருணை, இன்பமான சொல்லையே பேசுதல், அந்தணர்களையும் தேவதைகளையும் விருந்தினர்களையும் வணங்கிப் போற்றுதல் - இவைகளே ஒருவனை சுவர்க்கத்திற்கு அழைத்துச் செல்லும் வழிகள் என்று மகான்கள் சொல்லியிருக்கிறார்கள்.

186.

धर्मे रतास्सत्पुरुषैस्समेतास्तेजस्विनो दानगुणप्रधानाः।
अहिंसका वीतमलाश्च लोके भवन्ति पूज्या मुनयः
प्रधानाः।।2.109.36।।

தர்மே ரதாஸ் ஸத்புருஷைஸ் ஸமேதாஸ் தேஜஸ்விநோ
தானகுணப்ரதாநா꞉.
அஹிம்ஸகா வீதமலாஸ்ச லோகே பவந்தி பூஜ்யா முநய꞉
ப்ரதாநா꞉।।2.109.36।।

தர்மத்தில் உறுதியான நம்பிக்கை உடையவர்கள்,
மெய்ஞானிகளுடன் உறவு கொண்டிருப்பவர்கள், ஆன்ம ஒளி
மிக்கவர்கள், ஈகை குணத்தை முக்கியமாகக் கொண்டவர்கள். எந்த
ஜீவனையும் துன்புறுத்தாதவர்கள். மனமாசுகள் நீங்கியவர்கள்
இப்படிப்பட்ட உத்தம்மான முனிவர்கள்தாம், உலகத்தில்
பூஜிக்கத்தக்கவர்கள் ஆகின்றார்கள்.

187.

पिता ह्येनं जनयति पुरुषं पुरुषर्षभ ।
प्रज्ञां ददाति चाचार्यस्तस्मात् स गुरुरुच्यते ॥2.111.3

பிதா ஹ்யேனம் ஜனயதி புருஷம் புருஷர்ஷப ।
ப்ரக்ஞாம் ததாதி சாசார்யஸ் தஸ்மாத் ஸ குருருச்யதே ॥
2.111.3

ஆண்களுள் ஏறே! தந்தை மனிதனின் உடலை
உருவாக்குகிறார். ஆசான் அவனுக்கு ஞானத்தை
அருளுகிறார்; ஆகையால் அவர் குரு எனப்படுகிறார்.

188.

यन्मातापितरौ वृत्तं तनये कुरुतस्सदा।
न सुप्रतिकरं तत्तु मात्रा पित्राच यत्कृतम्।।2.111.9।।

யந்மாதாபிதரௌ வ்ருத்தம் தநயே குருதஸ்ஸதா.
ந ஸுப்ரதிகரம் தத்து மாத்ரா பித்ரா ச
யத்க்ருதம்।।2.111.9।।

தாய் தந்தையர் புதல்வனிடம் அன்புடன் பேசிப் பழகுகிறார்கள்; அவனுக்கு மகிழ்ச்சியளிக்கக் கூடியவைகளைச் செய்கிறார்கள்; இவற்றிற்கு கைம்மாறாக எக்காலத்திலும் எதையும் செய்து தீர்க்க முடியாது

189.

यथाशक्ति प्रदानेन स्वापनोच्छादनेनच।
नित्यंच प्रियवादेन तथा संवर्धनेनच।।2.111.10।।

யதாசக்தி ப்ரதாநேந ஸ்வாபநோச்சாதநேந ச.
நித்யம் ச ப்ரியவாதேந ததா ஸம்வர்தநேந ச।।2.111.10।।

அவன் விரும்பிக் கேட்டவைகளை, தங்களால் இயன்றதைக் கொடுக்கிறார்கள்; கூட இருந்து தூங்கப் பண்ணுகிறார்கள். அவனை நீராட்டி ஆடை அணிவிக்கிறார்கள், எப்போதும் பாசத்தோடு பேசுகிறார்கள், ஊட்டி வளர்க்கிறார்கள்.

190.

ब्राह्मणो ह्येकपार्श्वेन नरान्रोद्धुमिहार्हति।
न तु मूर्धाभिषिक्तानां विधिः प्रत्युपवेशने।।2.111.17।।

ப்ராஹ்மணோ ஹ்யேகபார்ஶ்வேந நராந்
ரோத்துமிஹார்ஹதி.
ந து மூர்தாபிஷிக்தாநாம் விதி: ப்ரத்யுபவேஶநே।।2.111.17।।

அந்தணர், ஒருபுறமாகவே படுத்திருந்து, விரோதம் தெரிவிக்குமுகமாக (ஹர்தால் போல), தனக்கு அநியாயமிழைத்துவிட்ட மனிதர்களைத் தடை செய்யலாம்; ஆனால், முடிசூட்டிக் கொள்ளும் உரிமை பெற்ற க்ஷத்திரியர்களுக்கு இது விதிக்கப்படவில்லை.

191.

विक्रीतमाहितं क्रीतं यत्पित्रा जीवता मम।
न तल्लोपयितुं शक्यं मया वा भरतेनवा।।2.111.28।।

விக்ரீதமாஹிதம் க்ரீதம் யத்பித்ரா ஜீவதா மம.
ந தல்லோபயிதும் ஶக்யம் மயா வா பரதேந
வா।।2.111.28।।

என் தந்தையார் உயிருடன் இருக்கும்போது விற்றுவிட்ட-வாங்கிய-அடகு வைக்கப்பட்ட பொருளை என்னாலோ பரதனாலோ மாற்றியமைக்க முடியாது.

## 192.

उपाधिर्न मया कार्यो वनवासे जुगुप्सितः।
युक्तमुक्तंच कैकेय्या पित्रामे सुकृतं कृतम्।।2.111.29।।

உபாதிர்ந மயா கார்யோ வநவாஸே ஜுகுப்ஸித:.
யுக்தமுக்தம்ச கைகேய்யா பித்ரா மே ஸுக்ருதம் க்ருதம்।।2.111.29।।

வனவாசத்தில் வெறுப்புக் கொண்டு (அதை தவிர்ப்பதற்காக) என்னால் வேறொருவரைப் பிரதிநிதியாகச் செய்யமுடியாது. கைகேயித் தாயார் நியாயமாகவே வரம் கேட்டார். (தந்தை முன்பு கொடுத்த வாக்குறுதியைத்தானே கேட்டார். அது எப்படி தவறாகும்.) என் தந்தை செய்ததும் சரியானதுதான்.

## 193.

लक्ष्मीश्चन्द्रादपेयाद्वा हिमवान्वा हिमं त्यजेत्।
अतीयात्सागरो वेलां न प्रतिज्ञामहं पितुः।।2.112.18।।

லக்ஷ்மீஶ்சந்த்ராதபேயாத்வா ஹிமவாந்வா ஹிமம் த்யஜேத்
அதீயாத் ஸாகரோ வேலாம் ந ப்ரதிஜ்ஞாமஹம் பிது:।।2.112.18।।

சந்திரனிடமிருந்து அதனுடைய ஒளி நீங்கிப் போனாலும் போகலாம்; இமயமலை பனிக்கட்டிகளை விட்டும் விடலாம்; பெருங்கடல் கரையைக் கடக்கவும் செய்யலாம். ஆனால் தந்தைக்குக் கொடுத்த வாக்கை நான் காப்பாற்றாமல் இருக்கமாட்டேன்.

194.

दुश्शीलः कामवृत्तोवा धनैर्वा परिवर्जितः।
स्त्रीणामार्यस्वभावानां परमं दैवतं पतिः।।2.117.23।।

துஶ்ஶீல: காமவ்ருத்தோ வா தனைர்வா பரிவர்ஜித:.
ஸ்த்ரீணாமார்யஸ்வபாவாநாம் பரமம் தைவதம்
பதி:।।2.117.23।।

(அனஸூயை ஸீதையிடம்) கணவன், தீய நடத்தையுடையவனாக இருந்தாலும், காமாதுரனாக இருந்தாலும், செல்வம் இல்லாதவனாக இருந்தாலும் மேன்மையான குணங்கள் கொண்ட பெண்களுக்கு கணவனே மிக உயர்ந்த தெய்வம்.

195.

नातो विशिष्टं पश्यामि बान्धवं विमृशन्त्यहम्।
सर्वत्र योग्यं वैदेहि तपःकृतमिवाव्ययम्।।2.117.24।।

நாதோ விஶிஷ்டம் பச்யாமி பாந்தவம்
விம்ருஶந்த்யஹம்.
ஸர்வத்ர யோக்யம் வைதேஹி! தப:
க்ருதமிவாவ்யயம்।।2.117.24।।

வைதேகி! நான் தீவிரமாகச் சிந்தித்துப் பார்த்துவிட்டேன். கணவரைவிட நெருக்கமான ஓர் உறவை நான் காண்கிலேன். செய்த தவத்தின் அழிவற்ற (பொய்க்காத) பலன்போல், எவ்விடத்திலும் (இவ்வுலகிலிம் மேலுகிலும்) அவரே நமக்கு உறுதுணையாக இருப்பவர்.

196.

नत्वेवमवगच्छन्ति गुणदोषमसत्स्त्रियः।
कामवक्तव्यहृदया भर्तृनाथाश्चरन्ति याः॥2.117.25॥

ந த்வேவமவகச்சந்தி குணதோஷமஸத்ஸ்த்ரிய:.
காமவக்தவ்யஹ்ருதயா பர்த்ருநாதாஶ்சரந்தி
யா:॥2.117.25॥

கணவனை அடக்கி ஆள்பவர்களும், காமத்தில் ஈடுபட்ட மனமுடையவர்களான தீய ஒழுக்கம் உடைய பெண்கள், நல்லது கெட்டதுகளை அறியமாட்டார்கள்.

197.

प्राप्नुवन्त्ययशश्चैव धर्मभ्रंशंच मैथिलि।
अकार्यवशमापन्नाः स्त्रियो याःखलु तद्विधाः॥2.117.26॥

ப்ராப்நுவந்த்யயஶஶ்சைவ தர்மப்ரம்சம் ச மைதிலி.
அகார்யவஶமாபந்நா: ஸ்த்ரியோ யா: கலு
தத்விதா:॥2.117.26॥

மைதிலி! இப்படிப்பெட்ட பெண்கள் செய்யத்தகாத காரியங்களில் சிக்கிக் கொள்கிறார்கள். நேரான வழியிலிருந்து வழுவிச் சென்று இகழ்ச்சியை அடைகிறார்கள்.

198.

त्वद्विधास्तु गुणैर्युक्ता दृष्टलोकपरावराः।
स्त्रियस्स्वर्गे चरिष्यन्ति यथा धर्मकृतस्तथा।।2.117.27।।

த்வத்விதாஸ்து குணைர்யுக்தா த்ருஷ்ட லோக பராவரா:.
ஸ்த்ரியஸ் ஸ்வர்கே சரிஷ்யந்தி யதா
தர்மக்ருதஸ்ததா।।2.117.27।।

ஆனால் உன்னைப் போன்று உத்தம குணங்களோடு கூடிய பெண்மணிகள், உலகத்தில் உயர்வு-தாழ்வுகளை (அல்லது இகலோகம், பரலோகம் இவற்றினை) உணர்ந்து கொண்டு (கணவன் அனுஷ்டிக்கும் தர்ம காரியங்களில் அனுகூலமாக இருந்து), புண்ணியத்தை ஏராளமாகச் சம்பாதித்தவர்கள் சென்றடையும் சுவர்க்கத்தையே சென்றடைவார்கள்.

199.

धर्मपालो जनस्यास्य शरण्यस्त्वं महायशाः।
पूजनीयश्च मान्यश्च राजा दण्डधरो गुरुः।।3.1.18।।

தர்மபாலோ ஜநஸ்யாஸ்ய ஶரண்யஸ்த்வம்
மஹாயஶா:.
பூஜநீயஶ்ச மாந்யஶ்ச ராஜா தண்டதரோ குரு:।।3.1.18।।

(தபஸ்விகள் ராமரிடம்) அரசதண்டத்தைத் தரிக்கும் அரசனாகிய நீர் தர்மத்தைக் காப்பவனாகவும், ஜனங்களுக்கு அடைக்கலமாகவும், பெரும்புகழ் வாய்ந்தவனாகவும், எல்லோராலும் கொண்டாடத்தக்கவனாகவும், பூஜைக்குரியவனாகவும், குருவாகவும் இருக்கிறீர்.

200.

इन्द्रस्येह चतुर्भागः प्रजा रक्षति राघव।
राजा तस्माद्वरान्भोगान्रम्यान्भुङ्क्ते नमस्कृतः।।3.1.19।।

இந்த்ரஸ்யேஹ சதுர்பாக: ப்ரஜா ரக்ஷதி ராகவ.
ராஜா தஸ்மாத் வராந்போகாந் ரம்யாந் புங்க்தே
நமஸ்க்ருத:।।3.1.19।।

ராகவா! அரசன் இந்திரனின் நான்கிலொரு பங்காக இருந்துகொண்டு, பிரஜைகளை ரக்ஷிக்கிறான். அதனால் அரசன் எல்லோராலும் வணங்கப்பட்டு இங்கு மனதிற்கினிய உயர்ந்த போகங்களை அனுபவிக்கிறான்.

201.

ते वयं भवता रक्ष्या भवद्विषयवासिनः।
नगरस्थो वनस्थो वा त्वं नो राजा जनेश्वरः।।3.1.20।।

தே வயம் பவதா ரக்ஷ்யா பவத்விஷயவாஸிந:.
நகரஸ்தோ வநஸ்தோ வா த்வம் நோ ராஜா
ஜநேஶ்வர:।।3.1.20।।

நாங்கள் தங்கள் ராஜ்யத்தில் வசிக்கிறோம்; அதனால் தங்களால் ரக்ஷிக்கப்படவேண்டியவர்கள். நகரத்திலிருந்தாலும் சரி, வனத்திலிருந்தாலும் சரி, தாங்கள் எங்கள் அரசன். எல்லோருக்கும் தலைவன்.

202.

न्यस्तदण्डा वयं राजञ्जितक्रोधा जितेन्द्रियाः।
रक्षणीयास्त्वया शश्वद् गर्भभूतास्तपोधनाः।।3.1.21।।

ந்யஸ்ததண்டா வயம்ராஜஞ் ஜிதக்ரோதா ஜிதேந்த்ரியா:.
ரக்ஷணீயாஸ் த்வயா சஶ்வத் கர்பபூதாஸ்
தபோதநா:।।3.1.21।।

அரசே, நாங்கள் எந்த ஜீவனுக்கும் தண்டனை கொடுப்பதை விட்டுவிட்டோம். கோபத்தையும், புலன்களையும் வென்றுள்ளோம். தவத்தையே செல்வமாகக் கொண்டுள்ளோம். தாய் கர்ப்பத்திலிருக்கும் சிசுவைக் காப்பதுபோல், தாங்கள் எங்களைக் காக்கவேண்டும்.

203.

अधर्मस्सुमहांस्तात भवेत्तस्य महीपतेः।
यो हरेद्बलिषड्भागं न च रक्षति पुत्रवत्।।3.6.11।।

அதர்மஸ்ஸுமஹாம்ஸ்தாத பவேத்தஸ்ய மஹீபதே:.
யோ ஹரேத் பலிஷட்பாகம் ந ச ரக்ஷதி
புத்ரவத்।।3.6.11।।.

எந்த வேந்தன் ஆறில்ஒருபாகம் வரி வசூலித்துவிட்டு, குடிமக்களைப் பிள்ளைகளைப்போல் காப்பாற்றுவதில்லையோ, அந்த அரசன் பெரிய அதர்மகர்த்தாவாகிறான்.

## 204.

युञ्जानस्स्वानिवप्राणान्प्राणैरिष्टान्सुतानिव।
नित्ययुक्तस्सदारक्षन्सर्वान्विषयवासिनः।।3.6.12।।

யுஞ்ஜாநஸ் ஸ்வாநிவப்ராணாந் ப்ராணைரிஷ்டாந் ஸுதாநிவ.
நித்யயுக்தஸ் ஸதாரக்ஷந் ஸர்வாந் விஷயவாஸிந:।।3.6.12।।

எந்த வேந்தன் எல்லா குடிமக்களையும் மிகவும் கருத்துடன் தன் ப்ராணனைப் போலவும், ப்ராணனைவிட அதிகப் பிரியமான புத்திரர்களைப் போலவும் ரக்ஷிக்கிறானோ................................

## 205.

प्राप्नोति शाश्वतीं राम कीर्तिं स बहुवार्षिकीम्।
ब्रह्मणस्स्थानमासाद्य तत्र चापि महीयते।।3.6.13।।

ப்ராப்நோதி ஷாஶ்வதீம் ராம கீர்திம் ஸ பஹுவார்ஷிகீம்.
ப்ரஹ்மணஸ் ஸ்தாநமாஸாத்ய தத்ர சாபி மஹீயதே।।3.6.13।।

அவ்வரசன், ராமனே, பல வருஷங்கள் நிலைத்திருக்கும் புகழையடைந்து, பின்னர் பிரம்மலோகம் சென்று, விசேஷமாக கௌரவிக்கப்படுகிறான்.

206.

यत्करोति परं धर्मं मुनिर्मूलफलाशनः।
तत्र राज्ञश्चतुर्भागः प्रजा धर्मेण रक्षितः।।3.6.14।।

யத்கரோதி பரம் தர்மம் முநிர்மூலபலாஶந:.
தத்ர ராஜ்ஞஶ்சதுர்பாக: ப்ரஜா தர்மேண ரக்ஷித:।।3.6.14।।

அரசனின் ராஜ்யத்தில் ஒரு முனிவர் பழங்களையும் வேர்களையும் உண்டு எந்த உயர்ந்த தர்மத்தை அனுஷ்டிக்கிறாரோ, அந்த தர்மத்தின் நான்கில் ஒரு பங்கு தர்மவிதிப்படி அரசனைச் சேர்கிறது.

207.

तमेवमुक्त्वो परमं रामस्सन्ध्यामुपागमत्।।3.7.22।।
अन्वास्य पश्चिमां सन्ध्यां तत्र वासमकल्पयत् ।

தமேவமுக்த்வோ பரமம் ராமஸ் ஸந்த்யாமுபாகமத்।।3.7.22।।
அன்வாஸ்ய பஶ்சிமாம் ஸந்தியாம் தத்ர வாஸமகல்பயத்.

முனிவரிடம் இவ்வாறு கூறிவிட்டு மௌனமாக ராமர் ஸந்தியாவந்தனம் செய்யச் சென்றார். மாலை ஸந்தியாவந்தனத்தை முடித்து ராமர் அங்கேயே (ஸுதீக்ஷ்ணர் ஆசிரமத்திலேயே) தங்கினார். (ராமர் எல்லா நிலைகளிலும் நித்திய கர்மானுஷ்டானங்களைச் சரிவரச் செய்யாமலில்லை என்பது கவனிக்கப்படவேண்டியது).

## 208.

अथतेऽग्निं सुरांश्चैव वैदेही रामलक्ष्मणौ।
काल्यं विधिवदभ्यर्च्य तपस्विशरणेवने।।3.8.3।।
उदयन्तं दिनकरं दृष्ट्वा विगतकल्मषाः ।

அததேऽக்நிம் ஸுராம்ஶ்சைவ வைதேஹீ ராமலக்ஷ்மணௌ.
கால்யம் விதிவதப்யர்ச்ய தபஸ்விஶரணேவநே।।3.8.3।।
உதயந்தம் தினகரம் த்ருஷ்ட்வா விகதகல்மஷா:.

ராமர், ஸீதை, லக்ஷ்மணர் மூவரும் காலையில்
செய்யவேண்டிய விதிப்படி அக்கினியையும்,
தேவதைகளையும் பூஜித்து, தபஸ்விகள் வசிக்கும் வனத்தில்
உதிக்கும் சூரியனைத் தரிசித்து குற்றம் நீங்கப்பெற்றார்கள்.

## 209.

त्रीण्येव व्यसनान्यत्र कामजानि भवन्त्युत।
मिथ्यावाक्यं परमकं तस्माद्गुरुतरावुभौ।।3.9.3।।
परदाराभिगमनं विनावैरं च रौद्रता ।

த்ரீண்யேவ வ்யஸநாந்யத்ர காமஜாநி பவந்த்யுத.
மித்யாவாக்யம் பரமகம் தஸ்மாத் குருதராவுபௌ।।3.9.3।।

பரதாராபிகமனம் வினா வைரம் ச ரௌத்ரதா.
(ஸீதை ராமரிடம்) காமத்தினால் ஏற்படும் மூன்று
வகையான தீமைகள் உள்ளன. முதலாவதாக,
பொய்பேசுதல் மிகப்பெரிய தீமை; அதனைவிட பெரிய
தீமைகள் இரண்டு உள்ளன. பிறர் மனைவியை நாடல்;
விரோதமில்லாமலேயே பிறரிடம் கொடுமையாக
நடந்துகொள்ளுதல்.

210.

क्षत्रियाणामपि धनुर्हुताशस्येन्धनानि च।।3.9.16।।
समीपतः स्थितं तेजोबलमुच्छ्रयते भृशम् ।

க்ஷத்ரியாணாமபி தநுர் ஹுதாஷஸ்யேந்தநாநிச।।3.9.16।।
ஸமீபத: ஸ்திதம் தேஜோபலமுச்ர்யதே ப்ருஶம்.

அக்கினியின் அருகில் வைத்த விறகு எவ்வாறு அக்கினியின் ஒளியை மிகுதியாக்குகிறதோ, அதுபோல, க்ஷத்திரியர்களிடம் வில் எங்கு உளதோ, அது அவர்களின் பலத்தை அதிகப்படுத்துகிறது.

211.

क्षत्रियाणां तु वीराणां वनेषु नियतात्मनाम्।।3.9.26।।
धनुषा कार्यमेतावदार्तानामभिरक्षणम् ।

க்ஷத்ரியாணாம் து வீராணாம் வநேஷு நியதாத்மநாம்।।3.9.26।।

தனுஷா கார்யமேதாவத்-ஆர்தானாம்-அபிரக்ஷணம். மனத்தை அடக்கிய க்ஷத்திரிய வீரர்களுக்கு வனத்தில் வில் வைத்திருப்பதன் பிரயோஜனம், துன்புற்றோரைக் காத்தலே.

212.

क्व च शस्त्रं क्व च वनं क्व च क्षात्रं तपः क्व च ।
व्याविद्धमिदमस्माभिर्देशधर्मस्तु पूज्यताम् ॥ 3.9.27||

க்வ ச ஶஸ்த்ரம் க்வ ச வனம் க்வ ச க்ஷாத்ரம் தப: க்வ ச.
வ்யாவித்தமிதமஸ்மாபிர் தேசதர்மஸ்து பூஜ்யதாம்.||3.9.27||

ஆயுதமேந்துதல் எங்கே, வனவாஸம் எங்கே. க்ஷத்திரிய ஸ்வபாவமான ஹிம்ஸை எங்கே, சாந்தமான தவம் எங்கே. இவைகள் ஒன்றுக்கொன்று விரோதமானவை. ஆகையால் நாமிருக்கும் இடத்திற்கு உகந்த தர்மத்தையே மதிப்போமாக.

213.

धर्मादर्थःप्रभवति धर्मात्प्रभवते सुखम्।।3.9.31।।
धर्मेण लभते सर्वं धर्मसारमिदं जगत्।

தர்மாதர்த:. ப்ரபவதி தர்மாத் ப்ரபவதே ஸுகம்।।3.9.31।।
தர்மேண லபதே ஸர்வம் தர்மஸாரமிதம் ஜகத்.

நீதி செல்வத்தைத் தருகிறது. செல்வம் மகிழ்ச்சியைத் தருகிறது. நீதி எல்லாவற்றையும் கொண்டுவருகிறது. உண்மையில், உலகின் சாரம் நீதியே.

## 214.

आत्मानं नियमैस्तैस्तैः कर्षयित्वा प्रयत्नतः।।3.9.32।।
प्राप्यते निपुणैर्धर्मो न सुखाल्लभ्यते सुखम्।

ஆத்மாநம் நியமைஸ்தைஸ்தை: கர்ஷயித்வா ப்ரயத்நத:।।3.9.32।।

ப்ராப்யதே நிபுணைர்தர்மோ ந ஸுகால்லப்யதேஸுகம்.
புத்திமான்கள் கடுமையான நியமங்களால் தங்கள் தேகத்தை வருத்தி, பெருமுயற்சியுடன் தர்மத்தை ஸம்பாதிக்கிறார்கள். ஏனெனில் லௌகீக சுகங்களால் நிரந்தர சுகத்தின் ஆதாரமான தர்மத்தை அடையமுடிவதில்லை.

## 215.

संश्रुत्यच न शक्ष्यामि जीवमानः प्रतिश्रवम्।
मुनीनामन्यथा कर्तुं सत्यमिष्टं हि मे सदा।।3.10.18।।

ஸம்ஶ்ருத்யசநஶக்ஷ்யாமிஜீவமாந:ப்ரதிஶ்ரவம்.
முநீநாமந்யதாகர்தும்ஸத்யமிஷ்டம்ஹிமேஸதா।।3.10.18।।

(ராமர் ஸீதையிடம்) முனிவர்களிடம் பிரதிக்ஞை செய்துவிட்டு, நான் உயிர் இருக்கும் வரை பிரதிக்ஞையைப் பொய்யாக்கமாட்டேன். ஏனெனில் ஸத்தியத்தைக் காப்பது எனக்கு எப்பொழுதும் பிரியமானது.

## 216.

अप्यहं जीवितं जह्यां त्वां वा सीते सलक्ष्मणाम्।
न तु प्रतिज्ञां संश्रुत्य ब्राह्मणेभ्यो विशेषतः।।3.10.19।।

அப்யஹ' ஜீவிதம் ஜஹ்யாம் த்வாம் வா ஸீதே
ஸலக்ஷ்மணாம்.
ந து ப்ரதிஜ்ஞாம் ஸம்ஷ்ருத்ய ப்ராஹ்மணேப்யோ
விஶேஷத:.।।3.10.19।।

ஸீதையே! நான் என் உயிரை விட்டாலும் விடுவேன். உன்னையோ லக்ஷ்மணனையோகூட தியாகம் செய்வேன். பிரதிக்ஞையை நான் மீறமாட்டேன், அதுவும் பிராம்மணர்களுக்குக் கொடுத்த வாக்கை.

## 217.

नात्र जीवेन्मृषावादी क्रूरो वा यदि वा शठः।
नृशंसः कामवृत्तो वा मुनिरेष तथाविधः।।3.11.90।।

நாத்ர ஜீவேந் ம்ருஷாவாதீ க்ரூரோவா யதிவா சட:.
ந்ருஶம்ஸ:. காமவ்ருத்தோவா முநிரேஷ
ததாவித:.।।3.11.90।।

இந்த ஆசிரமத்தில் பொய் சொல்பவன், கொடுமையானவன், ஏமாற்றுக்காரன், ஹிம்ஸிப்பவன், பாவச்செயல் செய்பவன் யாரும் உயிருடன் இருக்கமுடியாது - அவ்வளவு சக்திவாய்ந்தவர் இம்முனிவர் அகஸ்தியர்.

218.

एषा हि प्रकृतिः स्त्रीणामासृष्टे रघुनन्दन।
समस्थमनुरज्यन्ति विषमस्थं त्यजन्तिच।।3.13.5।।

ஏஷாஹி ப்ரக்ருதி:. ஸ்த்ரீணாமாஸ்ருஷ்டே ரகுநந்தந.
ஸமஸ்தமநுரஜ்யந்தி விஷமஸ்தம் த்யஜந்திச।।3.13.5।।

(அகஸ்தியர் ராமரிடம்) ராமா! ஸ்ருஷ்டிகாலத்திலிருந்து இப்போது வரை பெண்கள் ஸ்வபாவம் இவ்வாறுதான் இருந்திருக்கிறது- கணவர் நல்ல நிலையில் இருக்கும் வரை அவரிடம் பிரியமாக இருப்பர்; மோசமான நிலையில் இருக்கும்போது கணவரைக் கைவிட்டுவிடுவர்.

219.

शतह्रदानां लोलत्वं शस्त्राणां तीक्ष्णतां तथा।
गरूडानिलयोश्शैघ्र्यमनुगच्छन्ति योषितः।।3.13.6।।

ஷதஹ்ரதாநாம் லோலத்வம் ஶஸ்த்ராணாம் தீக்ஷ்ணதாம்ததா.
கருடாநிலயோஶ்சைக்ர்யமநுகச்சந்தி யோஷித:।।3.13.6।।

பெண்கள் மின்னல் போன்ற சஞ்சலமும், ஆயுதங்களின் கூர்மையும், கருடன், வாயு ஆகியோரின் வேகமும் கொண்டிருப்பர்.

220.

इयं तु भवतो भार्या दोषैरेतैर्विवर्जिता।
श्लाघ्याच व्यपदेश्याच यथा देवी ह्यरुन्धती।।3.13.7।।

இயம் து பவதோ பார்யா தோஷைரேதைர் விவர்ஜிதா.
ஶ்லாக்யாச வ்யபதேஶ்யாச யதா தேவீ
ஹ்யருந்ததீ।।3.13.7।।

இந்த ஸீதை- தங்கள் மனைவி- மேற்சொன்ன இந்தக் குற்றங்கள் இல்லாதவள். அருந்ததி தேவியைப்போல் இவள் பதிவிரதை, போற்றத்தக்கவள், குறிப்பிடத்தக்கவள்.

221.

भावज्ञेन कृतज्ञेन धर्मज्ञेनच लक्ष्मण।
त्वया पुत्रेण धर्मात्मा न संवृत्तः पिता मम।।3.15.29।।

பாவஜ்ஞேந க்ருதஜ்ஞேந தர்மஜ்ஞேநச லக்ஷ்மண.
த்வயா புத்ரேண தர்மாத்மா ந ஸம்வ்ருத்த: பிதா
மம।।3.15.29।।

(ராமர் லக்ஷ்மணரிடம்) லக்ஷ்மணா! நீ என் மனோபாவத்தை நன்கு புரிந்துகொள்பவனாகவும், செய்நன்றி மிக்கவனாகவும், தர்மம் அறிந்தவனாகவும் இருக்கிறாய். உன்னைப்போன்ற புத்திரன் காரணத்தினால் தர்மபுருஷரான என் பிதா இப்போதும் மரிக்கவில்லை. (உன் உருவில் ஜீவித்திருக்கிறார்.)

## 222.

एनां विरूपामसतीं करालां निर्णतोदरीम्।
भार्यां वृद्धां परित्यज्य त्वामेवैष भजिष्यति।।3.18.11।।

ஏநாம் விரூபாமஸதீம் கராலாம் நிர்ணதோதரீம்.
பார்யாம் வ்ருத்தாம் பரித்யஜ்ய த்வாமேவைஷ பஜிஷ்யதி।।3.18.11।।

(லக்ஷ்மணன் சூர்ப்பணகையிடம்) அழகில்லாத, துர்நடத்தையுள்ள, பயங்கரமான, பெருவயிறுடைய இந்தக் கிழ மனைவியை விட்டு, இவர் உன்னையே விரும்புவார். இது சூர்ப்பணகைக்காக சொல்லப்பட்ட பொருள். லக்ஷ்மணனின் உள்ளர்த்தம்- ஸீதை விசேஷ ரூபவதி, தன்னைவிட உயர்ந்த நடத்தை யாரிடமும் இல்லாதவள், சரீரப்பாங்கு இருக்கவேண்டியபடி இருப்பவள், வயிற்றின் கீழ்பாகம் குறுகி அழகுமிக்கவள், ஞானத்தில் முதிர்ந்தவள். அதனால் உன்னைவிட்டு இவளையே ராமர் அடைவார்.

## 223.

लोभात्पापानि कुर्वाणः कामाद्वा यो न बुध्यते।
भ्रष्टः पश्यति तस्यान्तं ब्राह्मणी करकादिव।।3.29.5।।

லோபாத் பாபாநி குர்வாண: காமாத்வா யோ ந புத்யதே.
ப்ரஷ்ட: பஶ்யதி தஸ்யாந்தம் ப்ராஹ்மணீ
கரகாதிவ।।3.29.5।।

இல்லாத பொருளுக்காக ஆசையும், இருக்கும் பொருள் மேன்மேலும் வேண்டும் என்பதில் பேராசையும் கொண்டு, பாவச்செயல்கள் செய்து அதன் விளைவைப் புரிந்துகொள்ளமல், சுகத்தினை அனுபவிப்பவன் முடிவில் அழிகிறான் - பெரிய எறும்பு (பிராம்மணி என்கிற பூச்சி) ஆலங்கட்டியை விழுங்குவதுபோல.

224.

न चिरं पापकर्माणः क्रूरा लोकजुगुप्सिताः।
ऐश्वर्यं प्राप्य तिष्ठन्ति शीर्णमूला इव द्रुमाः।।3.29.7।।

ந சிரம் பாபகர்மாண: க்ரூரா லோகஜுகுப்ஸிதா:.
ஐஶ்வர்யம் ப்ராப்ய திஷ்டந்தி ஷீர்ணமூலா இவ
த்ருமா:।।3.29.7।।

பாவச்செயல் செய்பவர், கொடுமையானவர், ஜனங்களால் நிந்தனைக்குள்ளானவர், (பழைய புண்ணியவசத்தினால்) செல்வத்தை அடைந்தாலுங்கூட, வெகு நாட்கள் அதனைத் தக்கவைத்துக்கொள்ள முடியாது - வேர் சிதைந்த மரங்களைப்போல.

225.

अवश्यं लभते जन्तुःफलं पापस्य कर्मणः।
घोरं पर्यागते काले द्रुमाः पुष्पमिवार्तवम्।।3.29.8।।

அவஶ்யம் லபதே ஜந்து: பலம் பாபஸ்ய கர்மண:.
கோரம் பர்யாகதே காலே த்ருமா:
புஷ்பமிவார்தவம்।।3.29.8।।

பாவச்செயல் செய்பவர் பாவச்செயலின் பலனை உரிய காலத்தில் அவசியம் அனுபவித்தே தீருவர் - மரத்தில் சரியான பருவகாலத்தில் பூக்கள் பூப்பதுபோல்.

226.

सक्तं ग्राम्येषु भोगेषु कामवृत्तं महीपतिम् ।
लुब्धं न बहु मन्यन्ते श्मशानाग्निमिव प्रजाः ॥3.33.3

ஸக்தம் க்ராம்யேஷு போகேஷு காமவ்ருத்தம் மஹீபதிம்.
லுப்தம் ந பஹு மன்யந்தே ச்மசானாக்னிமிவ ப்ரஜா:.||3.33.3||

எந்த அரசன் கீழான போகங்களில் மிகுதியாக ஈடுபட்டு, தன்னிஷ்டம்போல் நடந்துகொண்டு, பேராசைக்காரனாக இருக்கிறானோ, ஜனங்கள் அவனை மயானத்தின் அக்கினியைப்போல் மதிக்கமாட்டர்கள்.

227.

स्वयं कार्याणि यः कालेनानुतिष्ठति पार्थिवः।
स तु वै सहराज्येन तैश्च कार्यैर्विनश्यति।।3.33.4।।

ஸ்வயம் கார்யாணி ய:. காலே நாநுதிஷ்டதி பார்திவ:.
ஸ து வை ஸஹராஜ்யேந தைஶ்ச கார்யைர்விநஶ்யதி।।3.33.4।।

சரியான நேரத்தில் தானே செயல்படாத அரசன் ராஜ்யத்துடனும் அதன் படைப்புகளுடனும் அழிவான்.

228.

अयुक्तचारं दुर्दर्शमस्वाधीनं नराधिपम्।
वर्जयन्ति नरा दूरान्नदीपङ्कामिव द्विपाः।।3.33.5।।

அயுக்தசாரம் துர்தர்ஶமஸ்வாதீநம் நராதிபம்.
வர்ஜயந்தி நராதூராந் நதீபங்காமிவ த்விபா:।।3.33.5।।

எந்த அரசன் (அரசு காரியத்திற்காக) ஒற்றர்களை நியமிக்கவில்லையோ, பிரஜைகளுக்கு பார்க்கக் கிடைக்காமல் இருக்கிறானோ, சுயகட்டுப்பாடின்றி செயல்படுகிறானோ, அவனை வெகு தூரத்திலிருந்தே மக்கள் ஒதுக்கிவைப்பர் - யானைகள் சேறுநிறைந்த ஆற்றினை ஒதுக்குவதுபோல.

229.

ये न रक्षन्ति विषयमस्वाधीना नराधिपाः।
ते न वृद्ध्या प्रकाशन्ते गिरयस्सागरे यथा।।3.33.6।।

யே ந ரக்ஷந்தி விஷயமஸ்வாதீநா நராதிபா:.
தே ந வ்ருத்த்யா ப்ரகாஶந்தே கிரயஸ் ஸாகரே யதா।।3.33.6।।

எந்த அரசர்கள் சரியாக ரக்ஷிக்காமல் தன் ராஜ்யத்தின் பகுதியைப் பிறருக்கு இழந்துவிடுகிறார்களோ, மறுபடியும் அதனைத் தன் அதிகாரத்தின்கீழ் கொண்டுவர முயற்சிக்கவில்லையோ, அந்த அரசர்கள் ஒளிபெற்று நில்லார் - மலைகள் கடலில் அமுங்கிவிடுவதுபோல்.

230.

येषां चारश्च कोशश्च नयश्च जयतां वर।
अस्वाधीना नरेन्द्राणां प्राकृतैस्ते जनैस्समाः।।3.33.9।।

யேஷாம் சாரஶ்ச கோசஶ்ச நயஶ்ச ஜயதாம் வர.
அஸ்வாதீநா நரேந்த்ராணாம் ப்ராக்ருதைஸ்தே
ஜநைஸ்ஸமா:.।।3.33.9।।

வெற்றிவீரர்களில் சிறந்தவரே! எந்த அரசர்களுடைய ஒற்றர்கள், கருவூலம், நீதி இவை அவனுடைய கட்டுப்பாட்டில் இல்லையோ, அவர்கள் ஸாதாரண ஜனங்களைப்போல் ஆகிவிடுவர்.

231.

तीक्ष्णमल्पप्रदातारं प्रमत्तं गर्वितं शठम्।
व्यसने सर्वभूतानि नाभिधावन्ति पार्थिवम्।।3.33.15।।

தீக்ஷ்ணமல்பப்ரதாதாரம் ப்ரமத்தம் கர்விதம் ஶடம்.
வ்யஸநே ஸர்வபூதாநி நாபிதாவந்தி பார்திவம்।।3.33.15।।

எவ்வரசன் கடுமையான நடத்தையுள்ளவனாகவும், கொடையில் வறியவனாகவும், போதையேறியவனாகவும், கர்வம் மிகுந்தவனாகவும், ஏமாற்றுக்காரனாகவும் இருக்கிறானோ, துன்பம் வருங்கால் எல்லா பிராணிகளும் அவனுக்கு உதவ முன்வரார்.

232.

अतिमानिनमग्राह्यमात्मसम्भावितं नरम्।
क्रोधिनं व्यसने हन्ति स्वजनोऽपि महीपतिम्।।3.33.16।।

அதிமாநிநமக்ராஹ்யமாத்மஸம்பாவிதம் நரம்.
க்ரோதிநம் வ்யஸநே ஹந்தி ஸ்வஜநோபி
மஹீபதிம்।।3.33.16।।

அதிக கர்வம் பிடித்தவனும், பிறரால் ஏற்றுக்கொள்ளமுடியாதவனும், தன்னைத்தானே உயர்வாக எண்ணிக்கொள்பவனும், கோபம் மிகுந்தவனும் ஆன மனிதனை, அரசனை, கஷ்டம் வருங்கால் அவனைச் சேர்ந்தவர்களே கொன்றுவிடுவர்.

233.

नानुतिष्ठति कार्याणि भयेषु न बिभेतिच।
क्षिप्रं राज्याच्युतो दीनस्तृणैस्तुल्यो
भविष्यति।।3.33.17।।

நாநுதிஷ்டதி கார்யாணி பயேஷு ந பிபேதிச.
க்ஷிப்ரம் ராஜ்யாச்யுதோ தீநஸ் த்ருணைஸ் துல்யோ
பவிஷ்யதி।।3.33.17।।

எந்த அரசன் காரியங்களைச் சரிவரச் செய்யாமல், அச்சப்படவேண்டியவற்றிற்கு அச்சப்படாமல் உள்ளானோ, வெகுவிரைவிலேயே அவன் ராஜ்யத்திலிருந்து நழுவி, எளியவனாக, புல்லுக்கு சமமாக ஆகிறான்.

234.

सुलभाः पुरुषा राजन्सततं प्रियवादिनः।
अप्रियस्य तु पथ्यस्य वक्ता श्रोता च दुर्लभः।।3.37.2।।

ஸுலபா: புருஷா ராஜந் ஸததம் ப்ரியவாதிந:.
அப்ரியஸ்ய து பத்யஸ்ய வக்தா ஶ்ரோதாச
துர்லப:।।3.37.2।।

அரசே! எப்போதும் நமக்குப் பிடித்த சொற்களையே சொல்லும் மனிதர்கள் சுலபமாகக் கிடைப்பர். ஆனால் நமக்குப் பிடிக்காத, அதேசமயம் நன்மை பயக்கும் சொற்களைக் கூறுபவர்களும், அதனைச் செவிமடுத்துக் கேட்பவர்களும் அரிது.

235.

रामो विग्रहवान्धर्मस्साधुस्सत्यपराक्रमः।
राजा सर्वस्य लोकस्य देवानां मघवानिव।।3.37.13।।

ராமோ விக்ரஹவாந் தர்மஸ் ஸாதுஸ் ஸத்யபராக்ரம:.
ராஜா ஸர்வஸ்ய லோகஸ்ய தேவாநாம்
மகவாநிவ।।3.37.13।

(மாரீசன் ராவணனிடம்) ராமர் தர்மமே உருவானவர்; நன்நடத்தையுள்ள எளியவர்; ஸத்தியமே வலிமையாகவுள்ளவர். இந்திரன் எவ்வாறு தேவர்களுடைய அதிபதியோ, அவ்வாறே ராமர் இவ்வுலகம் முழுமைக்கும் அரசர்.

236.

रकारादीनि नामानि रामत्रस्तस्य रावण।
रत्नानि च रथाश्चैव त्रासं संजनयन्ति मे।।3.39.17।।

ரகாராதீநி நாமாநி ராமத்ரஸ்தஸ்ய ராவண.
ரத்நாநி ச ரதாஶ்சைவ த்ராஸம் ஸம்ஜநயந்தி
மே।।3.39.17।।

ராவணா! நான் ராமரைக்கண்டு இவ்வளவு பயந்துபோயிருக்கிறேன் - 'ர' என்ற எழுத்தில் ஆரம்பிக்கும் சொற்கள், உதாரணமாக ரத்னம், ரதம் முதலானவை, காதில் விழுந்தாலே எனக்கு மிகுந்த பயம் உண்டாகிறது.

237.

पञ्च रूपाणि राजानो धारयन्त्यमितौजसः।
अग्नेरिन्द्रस्य सोमस्य वरुणस्य यमस्यच।।3.40.12।।

பஞ்ச ரூபாணி ராஜாநோ தாரயந்த்யமிதௌஜஸ:.
அக்நேரிந்த்ரஸ்ய ஸோமஸ்ய வருணஸ்ய
யமஸ்யச।।3.40.12।।

எல்லையில்லா ஒளி பொருந்திய அரசர்கள் ஐந்து தேவ ஸ்வரூபங்களைத் தாங்குகின்றனர் - அக்கினி, இந்திரன், சந்திரன், வருணன், யமன் ஆகியோர்.

238.

औष्ण्यं तथा विक्रमंच सौम्यं दण्डं प्रसन्नताम्।
धारयन्ति महात्मानो राजानः क्षणदाचर।।3.40.13।।

ஔஷ்ண்யம் ததா விக்ரமம்ச ஸௌம்யம் தண்டம் ப்ரஸந்நதாம்.
தாரயந்தி மஹாத்மாநோ ராஜாந: க்ஷணதாசர।।3.40.13।।

அக்கினியின் தேஜஸ், இந்திரனின் வீரம், சந்திரனின் மனமகிழ்வு, யமனின் தண்டம், வருணனின் சந்தோஷம் இவற்றை மஹாத்மாக்களான அரசர்கள் கொண்டுள்ளனர்.

239.

अर्थं वा यदि वा कामं शिष्टाः शास्त्रेष्वनागतम् ।
व्यवस्यन्त्यनु राजानं धर्मं पौलस्त्यनन्दन। 3.50.9||

அர்த்தம் வா யதி வா காமம் ஶிஷ்டா: ஶாஸ்த்ரேஷ்வநாகதம்.
வ்யவஸ்யந்த்யநு ராஜாநம் தர்மம் பௌலஸ்த்யநந்தந. |3.50.9||

புலஸ்தியகுலத் தோன்றலே! தர்மமோ, அர்த்தமோ, காமமோ, ஶாஸ்திரங்களில் சொல்லப்படாத விஷயங்களைக்கூட, உயர்ந்த நடத்தை பூண்டவர்கள்கூட, அரசனைப் பார்த்து அனுஷ்டிக்க ஆரம்பித்து விடுவார்கள்.

240.

राजा धर्मस्य कामस्य द्रव्याणां चोत्तमो
निधिः।।3.50.10।।
धर्मश्शुभंवा पापंवा राजमूलं प्रवर्तते।.

ராஜா தர்மஸ்ய காமஸ்ய த்ரவ்யாணாம் சோத்தமோ
நிதி:।।3.50.10।।.
தர்மஶ்சுபம் வா பாபம்வா ராஜமூலம் ப்ரவர்ததே

அரசன் தர்மம், காமம் இவற்றிற்கு ஊற்றாகவும்,
பொருட்களின் நிறைந்த பொக்கிஷமாகவும் உள்ளான்.
அதனால் நல்லதோ, கெட்டதோ, எல்லா விஷயங்களுமே
அரசனையே மூலமாகக் கொண்டு விளங்குகின்றன.

241.

आश्वसिहि नरश्रेष्ठ प्राणिन: कस्य नापद: ।
संस्पृशन्त्यग्निवद्राजन् क्षणेन व्यपयान्ति च ॥3.66.6||

ஆஶ்வஸிஹி நரஶ்ரேஷ்ட ப்ராணின: கஸ்ய நாபத:.
ஸம்ஸ்ப்ருஶந்த்யக்னிவத் ராஜன் க்ஷணேன வ்யபயாந்தி ச.
||3.66.6||

(லக்ஷ்மணர் ராமரிடம்) மனிதர்களுள் சிறந்தவரே!
தாங்கள் தைரியமாக இருங்கள். உலகினில் எந்த
பிராணிக்கு ஆபத்தே வராமலிருக்கிறது. ஆபத்துக்கள்
அக்கினியைப் போல் ஒரு க்ஷணம் ஸ்பரிசம் செய்யவும்,
மறு க்ஷணம் விலகவும் செய்கின்றன.

242.

येन याति मुहूर्तेन सीतामादाय रावणः।
विप्रणष्टं धनं क्षिप्रं तत्स्वामी प्रतिपद्यते।।3.68.12।।

யேந யாதி முஹூர்தேந ஸீதாமாதாய ராவண:.
விப்ரணஷ்டம் தநம் க்ஷிப்ரம் தத்ஸ்வாமீ
ப்ரதிபத்யதே।।3.68.12।।

(ஜடாயு ராமரிடம்) ராவணன் ஸீதையை எந்த முஹூர்த்தத்தில் தூக்கி சென்றானோ, அதனில் இழந்த பொருள் திரும்ப உடைமையாளருக்கே கிடைத்துவிடும்.

243.

विन्दो नाम मुहूर्तोऽयं स च काकुत्स्थ नाबुधत्।
त्वत्प्रियां जानकीं हृत्वा रावणो राक्षसेश्वरः।।3.68.13।।

விந்தோ நாம முஹூர்தோயம் ஸ ச காகுத்ஸ்த நாபுதத்.
த்வத்ப்ரியாம் ஜாநகீம் ஹ்ருத்வா ராவணோ
ராக்ஷஸேஶ்வர:।।3.68.13।।

ககுத்ஸ்த குலத்தோன்றலே! இந்த 'விந்த' என்ற முஹூர்த்தம் அப்பேர்ப்பட்டது. அதை ராக்ஷஸ அரசனான ராவணன் - உன் பிரியமான ஜானகியைக் கவர்ந்தவன் - அறியான்.

244.

झषवद्बडिशं गृह्य क्षिप्रमेव विनश्यति।
न च त्वया व्यथा कार्या जनकस्य सुतां प्रति।।3.68.14।।

ஜஷவத் படிஶம் க்ருஹ்ய க்ஷிப்ரமேவ விநஶ்யதி.
ந ச த்வயா வ்யதா கார்யா ஜநகஸ்ய ஸுதாம் ப்ரதி।।3.68.14।।

மீன் எவ்வாறு வலையைப் பிடித்துக் கொள்கிறதோ, அதேபோல் ராவணனும் வெகுசீக்கிரத்தில் அழிவை அடைவான். தாங்கள் வீணாக ஜானகியைப்பற்றி துக்கப்படவேண்டாம்.

245.

उत्साहो बलवानार्य नास्त्युत्साहात्परं बलम्।
सोत्साहस्यास्तिलोकेऽस्मिन्न किञ्चिदपि दुर्लभम्।।4.1.121।।

உத்ஸாஹோபலவாநார்ய நாஸ்த்யுத்ஸாஹாத் பரம் பலம்.
ஸோத்ஸாஹஸ்யாஸ்தி லோகேஸ்மிந் நகிஞ்சிதபி துர்லபம்।।4.1.121।।

அண்ணாவே! உற்சாகமே பலம் பொருந்தியது. உற்சாகத்தைக் காட்டிலும் உயர்ந்த பலமில்லை. உற்சாகம் மிகுந்த மனிதனுக்கு உலகினில் எதுவுமே அடையமுடியாததில்லை.

246.

नानृग्वेदविनीतस्य नायजुर्वेदधारिणः।
नासामवेदविदुषश्शक्यमेवं विभाषितुम् ||4.3.28।।

நாந்ருக்வேதவிநீதஸ்ய நாயஜுர்வேததாரிண:.
நாஸாமவேதவிதுஷஶ் ஶக்யமேவ˙ விபாஷிதும்4.3.28।।

(ராமர் லக்ஷ்மணரிடம் ஹனுமாரைப்பற்றி) எவன் ருக்வேதத்தைக் கற்கவில்லையோ, யஜுர்வேதத்தைப் பயிற்சி செய்யவில்லையோ, ஸாமவேதவித்துவானாக இல்லையோ, அவனால் இவ்வளவு அழகாகப் பேசமுடியாது. (ருக்வேதத்தின் சொல்லமைப்பு, யஜுர்வேதத்தின் சொற்கோர்வை, ஸாமவேதத்தின் இனிமை இவை இவன் பேச்சில் உள்ளன என்று பொருள்.)

247.

एवंगुणगणैर्युक्ता यस्य स्युः कार्यसाधकाः।
तस्य सिध्यन्ति सर्वाऽर्था दूतवाक्यप्रचोदिताः4.3.35।।

ஏவம்குணகணைர் யுக்தா யஸ்ய ஸ்யு: கார்யஸாதகா:.
தஸ்ய ஸித்யந்தி ஸர்வாsர்தா
தூதவாக்யப்ரசோதிதா:4.3.35।।

எந்த அரசனுடைய தூதர்கள் இவ்வளவு உத்தமமான குணங்களுடன் காரியம் ஸாதிக்கும் திறன் பெற்று உள்ளார்களோ, அந்த அரசனுடைய காரியங்கள் யாவுமே தூதனுடைய பேச்சு ஸாமர்த்தியத்தினாலேயே நடந்துவிடுகின்றன.

248. नाहं जानामि केयूरे नाहं जानामि कुण्डले ||4.6.22।।
नूपुरेत्वभिजानामि नित्यं पादाभिवन्दनात्।

நாஹம் ஜாநாமி கேயூரே நாஹம் ஜாநாமி குண்டலே4.6.22।।
நூபுரேத்வபிஜாநாமி நித்யம் பாதாபிவந்தநாத்.

(லக்ஷ்மணர் ராமரிடம் ஸீதையின் நகைகளைப் பார்த்து) நான் இந்த தோள்வளைகளை அறியேன்; இந்த காதிலணியும் குண்டலங்களையும் அறியேன்; ஆனால் தினமும் நான் ஸீதையின் பாதத்தில் விழுந்து வணங்குவதினால், இந்த பாதத்திலணியும் சலங்கைகளை அறிவேன்.

249.
व्यसने वाऽर्थकृच्छ्रे वा भये वा जीवितान्तके।
विमृशन्वै स्वयाबुद्ध्या धृतिमान्नावसीदति||4.7.9।।

வ்யஸநே வாऽர்தக்ருச்ச்ரே வா பயே வா ஜீவிதாந்தகே.
விம்ருஶந்வை ஸ்வயாபுத்த்யா த்ருதிமாந்நாவஸீததி4.7.9।।

சோகம், பணச்சங்கடம், உயிருக்கு ஏற்படும் ஆபத்தின் பயம், இவைகள் முற்படும்போது, எவன் தன் அறிவினால் கஷ்ட நிவாரண உபாயத்தை அலசிப்பார்த்து தைரியத்துடன் செயல்படுகிறானோ, அவன் துயரப்படுவதில்லை.

250.

धनत्यागस्सुखत्यागो देहत्यागोऽपिवा पुनः।
वयस्यार्थे प्रवर्तन्ते स्नेहं दृष्ट्वा तथाविधम् ||4.8.9।।

தநத்யாகஸ் ஸுகத்யாகோ தேஹத்யாகோபி வா புந:.
வயஸ்யார்தே ப்ரவர்தந்தே ஸ்நேஹம் த்ருஷ்ட்வா
ததாவிதம் ||4.8.9||

நல்மனிதர்கள் நண்பனின் உயர்ந்த அன்பைப் பார்த்து, தேவை ஏற்படில், அவனுக்காக தன் செல்வம், சுகம், தேசத்தையுங்கூட தியாகம் செய்வர்.

251.

दमश्शमः क्षमा धर्मो धृतिस्सत्यं पराक्रमः।
पार्थिवानां गुणा राजन्दण्डश्चाप्यपराधिषु 4.17.18।।

தமஶ்சம: க்ஷமா தர்மோ த்ருதிஸ் ஸத்யம் பராக்ரம:.
பார்திவாநாம் குணா ராஜந்தண்டஶ்சாப்யபராதிஷு
|4.17.18||

அரசே! புலனடக்கம், மனக்கட்டுப்பாடு, பொறுமை, தைரியம், உண்மை, வன்மை, குற்றம் செய்தவர்களைத் தண்டித்தல் - இவை அரசனின் குணங்கள்.

## 252.

राजहा ब्रह्महा गोघ्नश्चोरः प्राणिवधे रतः 4.17.35।।
नास्तिकः परिवेत्ता च सर्वे निरयगामिनः।

ராஜஹா ப்ரஹ்மஹா கோக்நஶ் சோர꞉ ப்ராணிவதே ரத꞉4.17.35।।
நாஸ்திக꞉ பரிவேத்தாச ஸர்வே நிரயகாமிந꞉.

அரசனைக் கொன்றவன், பிராம்மணனைக் கொன்றவன், பசுமாட்டினை வதம் செய்தவன், திருடன், பிராணிகளை வதம் செய்வதில் ஈடுபட்டவன், நாஸ்திகன், பரிவேத்தா (அண்ணன் விவாகமாகாமலிருக்கும்போது, விவாகம் செய்துகொள்ளும் தம்பி) - இவர்கள் யாவரும் நரகம் செல்வர்.

## 253.

सूचकश्च कदर्यश्च मित्रघ्नो गुरुतल्पगः 4.17.36।।
लोकं पापात्मनामेते गच्छन्ते नात्र संशयः।

ஸூசகஶ்ச கதர்யஶ்ச மித்ரக்நோ குருதல்பக꞉ 4.17.36।।
லோகம் பாபாத்மநாமேதே கச்சந்தே நாத்ர ஸம்ஶய꞉.

கோள் சொல்பவன், லோபி, நண்பனைக் கொன்றவன், குருவின் மனைவியைத் தீண்டுபவன் - இவர்கள் பாபிகளின் உலகிற்குச் செல்வர்; இதில் ஸந்தேகமில்லை.

254.
ज्येष्ठो भ्राता पिताचैव यश्च विद्यां प्रयच्छति।
त्रयस्ते पितरो ज्ञेया धर्म्येच पथिवर्तिनः 4.18.13॥

ஜ்யேஷ்டோ ப்ராதா பிதாசைவ யஶ்ச வித்யாம் ப்ரயச்சதி.
த்ரயஸ்தே பிதரோ ஜ்ஞேயா தர்ம்யேச பதிவர்திந꞉ 4.18.13॥

(ராமர் வாலியிடம்) அண்ணன், தந்தை, கல்வி புகட்டும் குரு - இவர்கள் மூவரும், தர்மமார்க்கத்தில் இருப்பவர்களுக்கு, தந்தையைப் போலவே என்று அறியவேண்டும்.

255.
यवीयानात्मनःपुत्रः शिष्यश्चापि गुणोदितः।
पुत्रवत्ते त्रयश्चिन्त्या धर्मश्चेदत्र कारणम् 4.18.14॥

யவீயாநாத்மந꞉புத்ர꞉ ஶிஷ்யஶ்சாபி குணோதித꞉.
புத்ரவத்தே த்ரயஶ்சிந்த்யா தர்மஶ்சேதத்ர காரணம் 4.18.14॥

இளைய தம்பி, தன் மகன், நற்குணம் படைத்த சீடன் - இம்மூவரும் மகனுக்கு சமமாகவே எண்ணத்தக்கவர்; இதற்கு தர்மமே ஆதாரம்.

256.

न हि ते मर्षये पापं क्षत्रियोऽहं कुलोद्भवः।
औरसीं भगिनींवापि भार्यांवाप्यनुजस्य यः 4.18.22।।

ந ஹி தே மர்ஷயே பாபம் க்ஷத்ரியோ஽ஹம்
குலோத்பவ:.
ஔரஸீம் பகினீம்வாபி பார்யாம்வாப்யநுஜஸ்ய
ய:4.18.22।।

நான் உத்தமமான க்ஷத்திரிய குலத்தில் உதித்தவன்.
அதனால் உன் பாவத்தை நான் மன்னிக்க முடியாது. தன்
மகள், ஸகோதரி அல்லது இளைய தம்பியின் மனைவி
இவர்களுடன் .......

257.

प्रचरेत नरः कामात्तस्य दण्डो वधः स्मृतः।
भरतस्तु महीपालो वयंत्वादेशवर्तिनः 4.18.23।।

ப்ரசரேத நர: காமாத்தஸ்ய தண்டோ வத: ஸ்ம்ருத:
பரதஸ்து மஹீபாலோ வயம்த்வாதேஶவர்திந: 4.18.23।।

காமத்தினால் உறவு கொள்பவனுக்கு வதமே
தண்டனையாகச் சொல்லப்பட்டிருக்கிறது. பரதன் எங்கள்
அரசன்; அவருடைய ஆணையை நாங்கள்
பின்பற்றுகிறோம்.

258.

राजभिर्धृतदण्डाश्च कृत्वा पापानि मानवाः ।
निर्मलाः स्वर्गमायान्ति सन्तः सुकृतिनो यथा ॥4.18.31

ராஜபிர் த்ருதத்ண்டாஶ்ச க்ருத்வா பாபானி மானவா: |
நிர்மலா: ஸ்வர்கமாயாந்தி ஸந்த.: ஸுக்ருதினோ யதா
||4.18.31

மனிதர்கள் பாபம் செய்து அரசன் கொடுத்த தண்டனையை அனுபவித்துவிட்டால், அவர்கள் சுத்தமாக ஆகி புண்ணியபுருஷர்களைப்போல் ஸ்வர்க்கம் செல்வர்.

259.

शासनाद् वापि मोक्षाद् वा स्तेनः पापात् प्रमुच्यते ।
राजा त्वशासन् पापस्य तदवाप्नोति किल्बिषम् ॥4.18.32

ஶாஸனாத் வாபி மோக்ஷாத் வா ஸ்தேன: பாபாத் ப்ரமுச்யதே |
ராஜா த்வஶாஸன் பாபஸ்ய ததவாப்னோதி கில்பிஷம் ||4.18.32

பாபிகளுக்கு தண்டனையோ அல்லது விடுதலையோ அரசன் தந்துவிட்டால், திருடன் போன்ற பாபிகள் தாங்கள் செய்த பாபத்திலிருந்து விடுதலை அடைவர். ஆனால் அரசன் பாபிகளுக்கு தக்க தண்டனை அளிக்காவிடில், அந்த பாபத்தின் பலனை அரசனே அனுபவிக்க நேரிடும்.

260.

दुर्लभस्यच धर्मस्य जीवितस्य शुभस्यच 4.18.42।।
राजानो वानरश्रेष्ठ प्रदातारो न संशयः।

துர்லபஸ்யச தர்மஸ்ய ஜீவிதஸ்ய ஶுபஸ்யச4.18.42।।
ராஜாநோ வாநரஶ்ரேஷ்ட ப்ரதாதாரோ ந ஸம்ஶய:.

வானரஶ்ரேஷ்டனே! அரசர்கள் கிடைத்தற்கரிய தர்மம், வாழ்க்கை, உலகாயத முன்னேற்றம் இவைகளைக் கொடுக்க வல்லவர்கள். இதில் ஸந்தேஹமில்லை.

261.

तान्न हिंस्यान्नचाक्रोशेन्नाक्षिपेन्नाप्रियं वदेत्4.18.43।।
देवा मानुषरूपेण चरन्त्येते महीतले।

தாந்ந ஹிம்ஸ்யாந் நசாக்ரோஶேந் நாக்ஷிபேந் நாப்ரியம் வதேத் 4.18.43।।

தேவாமாநுஷ ரூபேண சரந்த்யேதே மஹீதலே.
அரசர்களை ஹிம்ஸித்தலோ, நிந்தனை செய்தலோ, ஆக்ஷேபித்தலோ, பிரியமில்லாத சொல் பேசுதலோ கூடாது. அவர்கள் உண்மையில் தேவர்கள்; மனிதரூபத்தில் இந்த பூமியில் ஸஞ்சரிக்கின்றனர்.

262.

न चातिप्रणयः कार्यः कर्तव्योऽप्रणयश्च ते।
उभयंहि महान्दोषस्तस्मादन्तरदृग्भव 4.22.23।।

நசாதிப்ரணய:. கார்ய:. கர்தவ்sயோப்ரணயஶ்ச தே.
உபயம் ஹி மஹாந்தோஷஸ் தஸ்மாதந்தரத்ருக்பவ
4.22.23।।

(வாலி அங்கதனிடம்) யாரிடமும் அதீத பிரேமை வேண்டாம்; பிரேமை முழுவதாக இல்லாமலும் இருக்கக்கூடாது. அதனால் நடுநிலையில் இரு.

263.

नियतिः कारणं लोके नियतिः कर्मसाधनम्।
नियतिस्सर्वभूतानां नियोगेष्विह कारणम् 4.25.4।।

நியதி:. காரணம் லோகே நியதி:. கர்மஸாதநம்.
நியதிஸ் ஸர்வபூதாநாம் நியோகேஷ்விஹ காரணம்
4.25.4।।

உலகில் நியதியே (பகவான் ஏற்படுத்தியுள்ள ஒழுங்குமுறை) எல்லாவற்றிற்கும் காரணம். நியதியே எல்லா காரியங்களுக்கும் ஸாதனம். நியதியே எல்லா ஜீவராசிகளையும் வெவ்வேறு காரியங்களில் நியமிக்கக் காரணம்.

264.

न कालस्यास्ति बन्धुत्वं न हेतुर्नपराक्रमः।
न मित्रज्ञातिसम्बन्धः कारणं नात्मनो वशः4.25.7।।

ந காலஸ்யாஸ்தி பந்துத்வம் ந ஹேதுர் ந பராக்ரம:.
ந மித்ரஜ்ஞாதிஸம்பந்த: காரணம் நாத்மநோ
வஶ:4.25.7।।

காலத்திற்கு யாருடனும் உறவு, நட்பு கிடையாது. காலத்தை வசப்படுத்த உபாயமுமில்லை. யாருடைய வீரமும் காலத்தின்மீது செல்லாது. காலம் (காலனாகிய கடவுள்) ஜீவனுடைய வசத்திலில்லை.

265.

अर्थिनामुपपन्नानां पूर्वं चाप्युपकारिणाम्।
आशां संश्रुत्य यो हन्ति स लोके पुरुषाधमः 4.30.71।।

அர்த்திநாமுபபந்நாநாம் பூர்வம் சாப்யுபகாரிணாம்.
ஆஶாம் ஸம்ஶ்ருத்ய யோ ஹந்தி ஸ லோகே
புருஷாதம:4.30.71।

நம்மிடம் காரியத்தை எதிர்பார்ப்பவர்; நம்மிடம் சரண் புகுந்தவர்; முன்னர் நமக்கு உபகாரம் செய்தவர்; - இப்பேர்ப்பட்டவர்களுக்கு பிரதிக்ஞையுடன் ஆசை காட்டி, பின்னர் அந்த பிரதிக்ஞையை முறித்தவன் உலகில் மிகவும் இழிவானவன்.

266.

मित्रं ह्यर्थगुणश्रेष्ठं सत्यधर्मपरायणम्।
तद्द्वयंतु परित्यक्तं न तु धर्मे व्यवस्थितम्।।4.33.48।।

மித்ரம் ஹ்யர்த்தகுணஸ்ரேஷ்டம் ஸத்யதர்மபராயணம்.
தத்த்வயம் து பரித்யக்தம் ந து தர்மே
வ்யவஸ்திதம்।।4.33.48।।

(லக்ஷ்மணர் தாரையிடம்) நண்பர்கள் இருவகையினர் - ஒருவர், தன் நண்பனுடைய பொருள் வளர்ச்சியில் தீவிரமாகயிருப்பவர்; மற்றவர், ஸத்தியம், தர்மத்திலும் உறுதியாக நிற்பவர். உன் தலைவர் இரு குணங்களையும் விட்டவர்- நண்பன் காரியத்தையும் நிறைவேற்றவில்லை; தானும் தர்மத்தில் நிலைநிற்கவில்லை.

267.

ब्रह्मघ्नेच सुरापेच चोरे भग्नव्रते तथा।
निष्कृतिर्विहिता सद्भिः कृतघ्ने नास्ति
निष्कृतिः।।4.34.12।।

ப்ரஹ்மக்நேச ஸுராபேச சோரே பக்நவ்ரதே ததா.
நிஷ்க்ருதிர் விஹிதா ஸத்பி: க்ருதக்நே நாஸ்தி
நிஷ்க்ருதி:।।4.34.12।।

பிரம்மஹத்தி, மதுபானம் செய்தவன், கள்ளன், விரதத்தை முறித்தவன் - இவர்களுக்கு சான்றோர்கள் பிராயச்சித்தம் விதித்துள்ளனர். ஆனால் செய்நன்றி கொன்றவர்க்கு பிராயச்சித்தம் இல்லை.

268.

धर्ममर्थं च कामं च काले यस्तु निषेवते ।4.38.20||
विभज्य सततं वीरस्स राजा हरिसत्तम।

தர்மமர்த்தம்ச காமம் ச காலே யஸ்து நிஷேவதே । 4.38.20||
விபஜ்ய ஸததம் வீரஸ் ஸ ராஜா ஹரிஸத்தம.

வீரனே! வானர ஶ்ரேஷ்டனே! யார் தர்மம், பொருள், காமம் இவற்றிற்கு காலத்தை சரிவர ஒதுக்கி, அந்தந்த காலத்தில் அதனதனை சேவிக்கிறானோ, அவனே சிறந்த அரசன்.

269.

हित्वा धर्मं तथाऽर्थंच कामं यस्तु निषेवते।।4.38.21।।
स वृक्षाग्रे यथा सुप्तः पतितः प्रतिबुध्यते।

ஹித்வா தர்மம் ததார்த்தம்ச காமம் யஸ்து நிஷேவதே।।4.38.21।।
ஸ வ்ருக்ஷாக்ரே யதா ஸுப்த: பதித: ப்ரதிபுத்யதே.

எவன் தர்மம், பொருள் இவற்றை தியாகம் செய்துவிட்டு, காமம் ஒன்றையே ஸேவிக்கிறானோ, அவன் மரத்தின் கிளை நுனியில் தூங்குபவனைப் போன்றவன்; கீழே விழுந்தபின்னரே அவன் விழிப்புறுகிறான்.

270.

व्यवसायश्च ते वीर सत्त्वयुक्तश्च विक्रमः।
सुग्रीवस्यच सन्देशस्सिद्धिं कथयतीव मे।।4.44.14।।

வ்யவஸாயஶ்ச தே வீர ஸத்த்வயுக்தஶ்ச விக்ரம:.
ஸுக்ரீவஸ்யச ஸந்தேஶஸ் ஸித்திம் கதயதீவ
மே।।4.44.14।।

(ராமர் ஹனுமாரிடம்) வீரனே! உன் முயற்சி, தைரியம், சக்தி, மற்றும் சுக்கிரீவன் உன்னிடம் ஒப்படைத்த தூதுச் செய்தி, இவைகளின் மூலம், உன் வழியாக என் காரியம் நிறைவேறப் போகிறது என்று அறிவேன்.

271.

विगृह्यासनमप्याहुर्दुर्बलेन बलीयसः।
आत्मरक्षाकरस्तस्मान्न विगृह्णीत दुर्बलः।।4.54.12।।

விக்ருஹ்யாஸநமப்யாஹுர் துர்பலேந பலீயஸ:.
ஆத்மரக்ஷாகரஸ்தஸ்மாந்ந விக்ருஹ்ணீத துர்பல:।।4.54.12।।

பலம் குன்றியவனிடம் விரோதம் செய்துகொண்டு, பலவானாக இருப்பவன் வெறுமனே இருக்கமுடியும். ஆனால் பலவானிடம் விரோதம் பூண்டு, பலம் குன்றியவன் வெறுமனே சுகமாக இருக்கமுடியாது. ஆகையால் அவன் தன் பாதுகாப்பை உத்தேசித்து பலவானிடம் விரோதம் செய்துகொள்ளக்கூடாது. இது நீதிமான்களின் கூற்று.

272.

अतिथिःकिल पूजार्हः प्राकृतोऽपि विजानता।
धर्मं जिज्ञासमानेन किं पुनस्त्वादृशो महान्।।5.1.120।।

அதிதி:கில பூஜார்ஹ: ப்ராக்ருதோऽபி விஜாநதா.
தர்மம் ஜிக்ஞாஸமாநேந கிம் புநஸ்த்வாத்ருசோ
மஹாந்।।5.1.120।।

அதிதியாக வந்திருப்பவர் பாமரனாக இருந்தபோதிலும், பண்புநெறி அறிந்தவர்களால் கௌரவிக்கத் தக்கவர் என்றிருக்கும்போது, உங்களைப் போன்ற மகான், நிச்சயம் நன்றாக உபசரிக்கப்பட வேண்டும் என்பதைச் சொல்லவும் வேண்டுமா?

273.

यस्यत्वेतानि चत्वारि वानरेन्द्र यथा तव।।5.1.198।।
धृतिर्दृष्टिर्मतिर्दाक्ष्यं स कर्मसु न सीदति ॥

யஸ்யத்வேதாநி சத்வாரி வாநரேந்த்ர யதா தவ।।5.1.198।।
த்ருதிர் த்ருஷ்டிர் மதிர் தாக்ஷ்யம் ஸ கர்மஸு ந ஸீததி.

வானரேந்திரா! தைரியம், தொலைநோக்கு, சட்டென்று முடிவெடுக்கும் துணிவு, செயல் திறன் ஆகிய நான்கும் உன்னைப் போன்று எவரிடம் இருகின்றனவோ, அவர் காரியங்களில் தோற்று வருத்தம் அடைய மாட்டார்..

## 274.

भूताश्चार्था विपद्यन्ते देशकालविरोधिताः।
विक्लबं दूतमासाद्य तमः सूर्योदये यथा।।5.2.39।।

பூதாஶ்சார்தா விபத்யந்தே தேஶகாலவிரோதிதா:.
விக்லபம் தூதமாஸாத்ய தம: ஸூர்யோதயே
யதா।।5.2.39।।

விவேகமில்லாத தூதனிடம் ஒப்படைக்கப்பட்ட காரியங்கள், இடம், காலம் வேறுபட்டு விட்டால், முடியும் தறுவாயில் உள்ளவை கூட, அவனால் தகுந்தபடி நடந்து கொள்ள முடியாததால், சூரியோதய கால இருள்போல், அழிந்து போகின்றன.

## 275.

अर्थानर्थान्तरे बुद्धिर्निश्चितापि न शोभते।
घातयन्ति हि कार्याणि दूताः पण्डितमानिनः।।5.2.40।।

அர்தாநர்தாந்தரே புத்திர் நிஶ்சிதாபி ந ஶோபதே.
காதயந்திஹி கார்யாணி தூதா: பண்டிதமாநிந:।।5.2.40।।

செய்யத் தக்கது; செய்யத் தகாதது என்று, (தீர்க்காலோசனைக்குப்பின், எஜமானனால்) முடிவு செய்யப்பட்டவைகளும்கூட (விவேகமில்லாத தூதனிடம் ஒப்படைக்கப்பட்ட காரியங்களும்) வெற்றி அடைவதில்லை; தங்களை மஹாபுத்திசாலிகள் என்று நினைத்துக் கொள்ளும் தூதர்கள், காரியங்களைக் கெடுத்து விடுகிறார்கள்.

276.

कामं दृष्टा मया सर्वा विश्वस्ता रावणस्त्रियः।।5.11.40।।
न हि मे मनसः किञ्चिद्वैकृत्यमुपजायते।

காமம் த்ருஷ்டா மயா ஸர்வா விஶ்வஸ்தா ராவணஸ்த்ரிய:।।5.11.40।।
ந ஹி மே மநஸ: கிஞ்சித் வைக்ருத்யமுபஜாயதே.

தாறுமாறாக கிடந்த இராவணனுடைய மனைவிகள் எல்லோரும் என்னால் பார்க்கப் பட்டார்கள்; ஆனால், என் மனத்தில் கொஞ்சமும் விகாரம் ஏற்படவில்லையே?

277.

मनो हि हेतुः सर्वेषामिन्द्रियाणां प्रवर्तने।।5.11.41।।
शुभाऽशुभास्ववस्थासु तच्च मे सुव्यवस्थितम् ॥

மநோ ஹி ஹேது: ஸர்வேஷாமிந்த்ரியாணாம் ப்ரவர்தநே।।5.11.41।।
சுபாசுபாஸ்வவஸ்தாஸு தச்ச மே ஸுவ்யவஸ்திதம்.

புண்ணிய-பாவ கர்மாக்களைச் செய்யும்படி புலன்களைத் தூண்டி விடுவது மனம் தான். அந்த என் மனம் சஞ்சலமில்லாமல் நிலையாக இருக்கிறது.

## 278.

अनिर्वेदः श्रियो मूलमनिर्वेदः परं सुखम्।
अनिर्वेदो हि सततं सर्वार्थेषु प्रवर्तकः।।5.12.10।।

அநிர்வேத꞉ ஷ்ரியோ மூலமநிர்வேத꞉ பரம்ஸுகம்.
அநிர்வேதோஹி ஸததம் ஸர்வார்தேஷு
ப்ரவர்தக꞉।।5.12.10।।

மனம் தளராமை தான், செலவத்திற்கு மூல காரணம்; மனம் தளராமை தான் பரமசுகத்தைக் கொடுக்கக் கூடியது; எந்தக் காரியத்தையும் எப்போதும் தூண்டிவிடுவது மனந்தளராமையே.

## 279.

मान्या गुरुविनीतस्य लक्ष्मणस्य गुरुप्रिया।
यदि सीताऽऽपिदुःखार्ता कालोहि दुरतिक्रमः।।5.16.3।।

மாந்யா குருவிநீதஸ்ய லக்ஷ்மணஸ்ய குருப்ரியா.
யதி ஸீதாபி து꞉கார்தா காலோஹி துரதிக்ரம꞉।।5.16.3।।

பெரியோர்களிடம் மரியாதை கொண்ட லட்சுமணனால் கௌரவிக்கத் தக்கவளும், ராமனுடைய பத்தினியுமான சீதைக்கும் இவ்வளவு துக்கம் ஏற்படுகிறது என்றால், விதியை யாராலும் மீறமுடியாது - என்பது சத்தியமல்லவா?

280.

भर्ता नाम परं नार्या भूषणं भूषणादपि।
एषातु रहिता तेन भूषणार्हा न शोभते।।5.16.26।।

பர்தா நாம பரம் நார்யா பூஷணம் பூஷணாதபி.
ஏஷாது ரஹிதா தேந பூஷணார்ஹா ந
ஶோபதே।।5.16.26।।

பெண்களுக்கு, மற்றெல்லா அணிகலன்களைக் காடிலும், கொண்ட கணவனே சிறந்த ஆபரணம். கணவனோடு கூட இருக்கத் தக்கவளான இவளோ, அவர் இல்லாததால், ஒளியுடன் இருக்கவில்லை.

281.

तृणमन्तरतः कृत्वा प्रत्युवाच शुचिस्मिता।
निवर्तय मनो मत्तः स्वजने क्रियतां मनः।।5.21.3।।

த்ருணமந்தரத:க்ருத்வா ப்ரத்யுவாச ஶுசிஸ்மிதா.
நிவர்தய மநோ மத்த: ஸ்வஜநே க்ரியதாம் மந:।।5.21.3।।

அழகிய புன்சிரிப்பு கொண்ட ஸீதை புல்லினை நடுவில் போட்டு ராவணனிடம் பதில் சொன்னாள்: (புல்லினை நடுவில் போட்டுப் பேசியதை மகான்கள் பலவாறாக அனுபவித்திருக்கிறார்கள். பரபுருஷனுடன் நேரிடையாகப் பேசாமல் புல்லினை நடுவில் போட்டுப் பேசினாள். நீ புல்லுக்கு சமமானவன்; என் உயிரினை நான் புல்லுக்கு சமமாகவே கருதுகிறேன்; புல்லினை எரிப்பது போல் ராமர் உன்னைப் போரில் அழிப்பார் என்றெல்லாம் உள்ளர்த்தத்துடன்.) என்னிடமிருந்து மனத்தைத் திருப்பு; உன் சொந்த மனைவிகளிடமே மனத்தைச் செலுத்து.

282.

अहमौपयिकी भार्या तस्यैव वसुधापतेः।।5.21.17।।
व्रतस्नातस्य विप्रस्य विद्येव विदितात्मनः।

அஹமௌபயிகீ பார்யா தஸ்யைவ
வஸுதாபதே:।।5.21.17।।
வ்ரதஸ்நாதஸ்ய விப்ரஸ்ய வித்யேவ விதிதாத்மந:

எவ்வாறு வேதாத்யயனம் செய்து ஆத்மதரிசனம் பெற்ற பிராம்மணனுக்கு வேதவித்யை செல்வமாகிறதோ, அவ்வாறே நான் பூமண்டலத்தின் அரசரான அந்த ராமருடைய பத்தினியாகவே இருக்கத் தகுதியுள்ளவள்.

283.

असन्देशात्तु रामस्य तपसश्चानुपालनात्।
न त्वां कुर्मि दशग्रीव भस्म भस्मार्हतेजसा।।5.22.20।।

அஸந்தேஶாத்து ராமஸ்ய தபஸஶ்சானுபாலநாத்.
ந த்வாம்குர்மி தஶக்ரீவ பஸ்ம
பஸ்மார்ஹதேஜஸா।।5.22.20।।

பத்துத் தலையனே! ராமனிடமிருந்து நான் உத்திரவு பெறவில்லை; நியமங்களோடு கூடிய ஒரு தவ வாழ்க்கையில் இருக்கிறேன். அதனால்தான் சாம்பலாக்கும் வல்லமை பெற்ற என் (கற்பின் சக்தியால்) தேஜஸால், உன்னை சாம்பலாக்காமலிருக்கிறேன்.

284.

दीनोवा राज्यहीनोवा यो मे भर्ता स मे गुरुः।
तं नित्यमनुरक्तास्मि यथा सूर्यं सुवर्चला।।5.24.9।।

தீநோவா ராஜ்யஹீநோவா யோ மே பர்தா ஸ மே குரு:.
தம் நித்யமநுரக்தாஸ்மி யதா ஸூர்யம்
ஸுவர்சலா।।5.24.9।।

என்னுடைய கணவர், எளியவராக இருந்தாலும், அரசாட்சி இல்லாதவராக இருந்தாலும் அவரே என் மதிப்புக்கு உரியவர். எப்போதும் சூரியனைத் தொடரும் சுவர்ச்சலை போல, நான் அவரிடம் ஈடுபடுகிறேன்.

285.

यथा शची महाभागा शक्रं समुपतिष्ठति।
अरुन्धती वसिष्ठंच रोहिणी शशिनं यथा।।5.24.10।।

யதா ஶசீ மஹாபாகா ஶக்ரம் ஸமுபதிஷ்டதி.
அருந்ததீ வஸிஷ்டம்ச ரோஹிணீ ஶசினம்
யதா।।5.24.10।।

பெரும் பாக்கியசாலியான சசி தேவி இந்திரனையும், அருந்ததி வசிஷ்டரையும், ரோகிணி சந்திரனையும் போல..........

286.

लोपामुद्रा यथागस्त्यं सुकन्या च्यवनं यथा।
सावित्री सत्यवन्तंच कपिलं श्रीमती यथा।।5.24.11।।

லோபாமுத்ரா யதாகஸ்த்யம் ஸுகந்யா ச்யவயம் யதா.
ஸாவித்ரீ ஸத்யவந்தம்ச கபிலம் ஸ்ரீமதீ யதா।।5.24.11।।

லோபாமுத்ரா அகஸ்தியரையும்; சுகன்யா ச்யவனரையும்; சாவித்ரி சத்தியவானையும்; ஸ்ரீமதி கபிலரையும் போல..........

287.

सौदासं मदयन्तीव केशिनी सगरं यथा।
नैषधं दमयन्तीव भैमी पतिमनुव्रता।।5.24.12।।
तथाऽहमिक्ष्वाकुवरं रामं पतिमनुव्रता।

ஸௌதாஸம் மதயந்தீவ கேஶிநீ ஸகரம் யதா.
நைஷதம் தமயந்தீவ பைமீ பதிமநுவ்ரதா।।5.24.12।।
ததாஹமிக்ஷ்வாகுவரம் ராமம் பதிமநுவ்ரதா.
மதயந்தி ஸௌதாஸரையும்; கேசினீ சகரனையும்;

பீமபுத்திரியான தமயந்தி நைஷதனையும் (நளன்), எவ்வாறு பின்பற்றுகிறார்களோ, அவ்வாறே நானும், இக்ஷ்வாகு குலத்தில் சிறந்தவரான ராமரைக் கணவனாக அடைந்து, அவரைப் பின்தொடர்ந்து நடக்கிறேன்.

288.

धन्याः खलु महात्मानो
मुनयस्त्यक्तकिल्बिषाः।।5.26.49।।
जितात्मनो महाभागा येषां न स्तः प्रियाप्रिये।

தந்யா:கலு மஹாத்மாநோ முநயஸ்
த்யக்தகில்பிஷா:।।5.26.49।।
ஜிதாத்மநோ மஹாபாகா யேஷாம் ந ஸ்த: ப்ரியாப்ரியே.

மாசு மருவற்றவர்களாகவும், தம்மை வென்றவர்களாகவும், மகா பாக்கியசாலிளாகவும் உள்ள மகாத்மாக்களான முனிவர்கள் போற்றத்தக்கவர்கள் அல்லவா? அவர்களுக்கு பிரியம் - அப்ரியம் என்ற வேற்றுமையே இல்லை.

289.

प्रियान्न संभवेद्दुःखमप्रियादधिकं भयम्।।5.26.50।।
ताभ्यांहि ये वियुज्यन्ते नमस्तेषां महात्मनाम्।

ப்ரியாந்ந ஸம்பவேத் து:கமப்ரியாததிகம் பயம்।।5.26.50।।
தாப்யாம்ஹி யே வியுஜ்யந்தே நமஸ்தேஷாம்
மஹாத்மநாம்.

மஹாத்மாக்களுக்கு பிரியமான பொருளின் பிரிவினால் துக்கமோ, பிரியமில்லாத பொருளின் வரவினால் அதிக பயமோ ஏற்படுவதில்லை. பிரிய, பிரியமில்லாத இரண்டிற்கும் மேலான நிலையிலுள்ள அந்த மகாத்மாக்களுக்கு என் நமஸ்காரங்கள்.

## 290.

मनसा पूर्वमासाद्य वाचा प्रतिगृहीतवान्।
दद्यान्न प्रतिगृह्णीयान्न ब्रूयात्किञ्चिदप्रियम्।।5.33.25।।
अपि जीवितहेतोर्वा रामस्सत्यपराक्रमः।

மநஸா பூர்வமாஸாத்ய வாசா ப்ரதிக்ருஹீதவாந்.
தத்யாந் ந ப்ரதிக்ருஹ்ணீயாந் ந ப்ரூயாத் கிஞ்சிதப்ரியம்।।5.33.25।।
அபி ஜீவிதஹேதோர் வா ராமஸ் ஸத்யபராக்ரம:.

ராமர் மனத்தால் தந்தையின் சொற்களை முன்னதாக ஏற்று, பின்னர் சொற்களாலும் அங்கீகரித்தார். (மனப்பூர்வமாகத் தந்தையின் கட்டளையை ஏற்றுக் கொண்டார்.) எவரிடமிருந்தும் எதையும் ஏற்கக் கூடாது; பிரியமில்லாதவைகளைப் பேசக் கூடாது; உயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்காகக் கூட சத்தியம் தவறக் கூடாது - என்பது ராமனுடைய கொள்கை.

## 291.

कल्याणी बत गाथेयं लौकिकी प्रतिभाति मा।
एति जीवन्तमानन्दो नरं वर्षशतादपि ॥

கல்யாணீ பத காதேயம் லௌகிகீ ப்ரதிபாதி மா ।
ஏதி ஜீவந்தமானந்தோ நரம் வர்ஷசதாதபி ॥

மனிதன் ஜீவித்திருந்தால், நூறு வருஷம் கழித்தாவது ஆனந்தத்தை அடைவான் என்கிற உலகத்தில் வழங்கும் பழமொழி, உண்மையாகவும், நலமுள்ளதாகவும் தற்போது விளங்குகிறது.

292.

ऐश्वर्येवा सुविस्तीर्णे व्यसनेवा सुदारुणे।
रज्ज्वेव पुरुषं बद्ध्वा कृतान्तः परिकर्षति।।5.37.3।।

ஐஶ்வர்யேவா ஸுவிஸ்தீர்ணே வ்யஸநேவா ஸுதாருணே.
ரஜ்ஜ்வேவ புருஷம் பத்த்வா க்ருதாந்த: பரிகர்ஷதி।।5.37.3।।

காலமானது, மனிதர்களைக் கயிற்றால் கட்டினாற்போல், மிகப்பெரும் செழிப்பு அல்லது மிகவும் பயங்கரமான துன்பம் ஆகிய பல்வேறு நிலைகளுக்கு இழுத்துச் செல்கிறது

293.

उत्साहः पौरुषं सत्त्वमानृशंस्यं कृतज्ञता।
विक्रमश्च प्रभावश्च सन्ति वानर राघवे।।5.37.13।।

உத்ஸாஹ: பௌருஷம் ஸத்த்வமாந்ருஶம்ஸ்யம் க்ருதஜ்ஞுதா.
விக்ரமஶ்ச ப்ரபாவஶ்ச ஸந்தி வாநர ராகவே।।5.37.13।।

வானரனே, காரியத்தைச் செய்து முடிக்க வேண்டும் என்ற துடிப்பும், கடுமையான முயற்சியும், பலமும், கொடுமையான செயல்களைச் செய்யாமல் இருப்பதும் நன்றிமறவாமையும் பராக்கிரமும் பிரபாவமும் ராகவனிடத்தில் இருக்கின்றன.

294.

भर्तुर्भक्तिं पुरस्कृत्य रामादन्यस्य वानर ।
नाहं स्प्रष्टुं स्वतो गात्रमिच्छेयं वानरोत्तम ॥ (5.37.62)

பர்துர்பக்திம் புரஸ்க்ருத்ய ராமாதன்யஸ்ய வானர.
நாஹம் ஸ்ப்ரஷ்டும் ஸ்வதோ காத்ரமிச்சேயம்
வானரோத்தம. (5.37.62)

வானரோத்தமனே, கணவனிடம் கொண்ட பக்தியினை முன்னிட்டு, ராமரைத்தவிர வேறொரு புருஷன் சரீரத்தை என் விருப்பப்படி ஸ்பரிசம் செய்ய நான் இஷ்டப்படவில்லை.

295.

आनृशंस्यं परोधर्म स्त्वत्त एव मया श्रुतः।
जानामि त्वां महावीर्यं महोत्साहं महाबलम्।।5.38.41।।

ஆந்ருஶம்ஸ்யம் பரோதர்மஸ் த்வத்த ஏவ மயா ஶ்ருத:.
ஜாநாமி த்வாம் மஹாவீர்யம் மஹோத்ஸாஹம்
மஹாபலம்।।5.38.41।।

(ஸீதை ராமரைப்பற்றி ஹனுமாரிடம்) கருணை காட்டுதல் மேலான தர்மமென்று தங்களிடமிருந்தே நான் கேட்டிருக்கிறேன். தங்கள் வீரியம், உத்ஸாஹம், பலம் எல்லாம் மகத்தானவை என்று நானறிவேன்.

296.

अपारपारमक्षोभ्यं गाम्भीर्यात्सागरोपमम्।
भर्तारं ससमुद्राया धरण्या वासवोपमम्।।5.38.42।।

அபாரபாரமக்ஷோப்யம் காம்பீர்யாத் ஸாகரோபமம்.
பர்தாரம் ஸஸமுத்ராயா தரண்யா
வாஸவோபமம்।।5.38.42।।

கம்பீரத்தன்மையில், கடக்க முடியாததும் வற்றச் செய்ய முடியாததுமான பெருங்கடலுக்கு நிகரானவர் என்றும், கடல் சூழ் உலகுக்குத் தலைவர் என்றும், தேவேந்திரனைப் போன்றவர் என்பதையும் நான் அறிவேன்.

297.

मद्विशिष्टाश्च तुल्याश्च सन्ति तत्र वनौकसः।
मत्तः प्रत्यवरः कश्चिन्नास्ति सुग्रीवसन्निधौ।।5.39.38।।

மத்விஶிஷ்டாஶ்ச துல்யாஶ்ச ஸந்தி தத்ர வநௌகஸ:.
மத்த: ப்ரத்யவர: கஶ்சிந்நாஸ்தி
ஸுக்ரீவஸந்நிதௌ।।5.39.38।।

(ஹனுமார் ஸீதையிடம்) என்னை விடத் திறமையானவர்களும் எனக்கு இணையானவர்களும் அங்கு இருக்கிறார்கள். என்னைக் காட்டிலும் தாழ்ந்த வானரம் ஏதும் சுக்ரீவனுடைய படையில் இல்லவே இல்லை.

298.

अहं तावदिहप्राप्तः किंपुनस्ते महाबलाः।
नहि प्रकृष्टाः प्रेष्यन्ते प्रेष्यन्ते हीतरे जनाः।।5.39.39।।

அஹம் தாவதிஹப்ராப்த: கிம்புநஸ்தே மஹாபலா:.
நஹி ப்ரக்ருஷ்டா: ப்ரேஷ்யந்தே ப்ரேஷ்யந்தே ஹீதரே ஜநா:।।5.39.39।।

(அவ்வளவு சாமான்யமான) நானே இந்த இடத்தை வந்தடைந்து விட்டேன் என்னும்போது, பெரும் பலசாலிகளான அவர்களுக்கு என்ன? சிறந்தவர்கள் (இப்படித் தேடித் திரியும் அல்ப வேலைகளுக்கு) அனுப்பப் படுவதில்லை; (என்னைப் போன்ற) சாமானியர்கள் தான் அனுப்பப்படுவார்கள்.

299.

न साम रक्षस्सु गुणाय कल्पते न दानमर्थोपचितेषु युज्यते।
न भेदसाध्या बलदर्पिता जनाः पराक्रमस्त्वेव ममेह रोचते।।5.41.3।।

ந ஸாம ரக்ஷஸ்ஸு குணாய கல்பதே ந தாநமர்தோபசிதேஷு யுஜ்யதே.
ந பேதஸாத்யா பலதர்பிதா ஜநா: பராக்ரமஸ்த்வேவ மமேஹ ரோசதே।।5.41.3।।

ராட்சஸர்களுடன் சமாதானம் செய்து கொள்வது என்பது நல்லதல்ல; அளவற்ற பொருள்வளம் கொண்டவர்களை, செலவத்தைக் கொடுத்து வசப்படுத்த முடியாது; பலத்தால் செருக்குக் கொண்டிருப்பவர்களை பேதம் செய்து பிரிக்க முடியாது; ஆகவே, இவர்களிடம் பராக்கிரமத்தைக் காட்டுவது தான் சிறந்த உபாயம் என்று எனக்குப் படுகிறது.

300.

कार्ये कर्मणि निर्दिष्टे यो बहून्यपि साधयेत्।
पूर्वकार्याविरोधेन स कार्यं कर्तुमर्हति।।5.41.5।।

கார்யே கர்மணி நிர்திஷ்டே யோ பஹூந்யபி ஸாதயேத்.
பூர்வகார்யாவிரோதேந ஸ கார்யம் கர்துமர்ஹதி।।5.41.5।।

ஒரு குறிப்பிட்ட வேலையைச் செய்துவரும்போது, அந்த மூல லட்சியத்துக்கு விரோதமில்லாத மற்ற பல காரியங்களையும் செய்து முடிப்பவனே செயல்திறன் உடையவன்.

301.

नह्येकस्साधको हेतुस्स्वल्पस्यापीह कर्मणः।
योह्यर्थं बहुधा वेद स समर्थोऽर्थसाधने।।5.41.6।।

நஹ்யேகஸ் ஸாதகோ ஹேதுஸ் ஸ்வல்பஸ்யாபீஹ கர்மண:.
யோஹ்யர்தம் பஹுதா வேத ஸ ஸமர்தோர்தஸாதநே।।5.41.6।।

சிறு காரியமானலும் அதை முடிப்பதற்கு ஒரே வழியை நம்பிக் கொண்டிருக்கக் கூடாது; பலவித உபாயங்களையும் அறிந்திருக்கவேண்டும். அப்படிப்பட்டவர் தான், காரியத்தைச் செய்து முடிக்கும் திறன் உள்ளவராவர்.

302.

न मेऽस्त्रबन्धस्यच शक्तिरस्ति विमोक्षणे लोकगुरोः प्रभावात्।
इत्येवमत्वा विहितोऽस्त्रबन्धो
मयाऽऽत्मयोनेरनुवर्तितव्यः।।5.48.41।।

ந மேஸ்த்ரபந்தஸ்யச ஶக்திரஸ்தி விமோக்ஷணே லோககுரோ: ப்ரபாவாத்.
இத்யேவமத்வா விஹிதோஸ்த்ரபந்தோ
மயாத்மயோனேரநுவர்திதவ்ய:।।5.48.41।।

பிரும்மாவின் பேராற்றலை உள்ளடக்கிய இந்தக் கட்டிலிருந்து விடுவித்துக் கொள்வதற்கு எனக்கு ஆற்றல் இல்லை என்று இந்திரஜித் எண்ணியுள்ளான்; இருந்தும் பிரம்மதேவனுடைய மரியாதைக்காக இந்த அஸ்திரக்கட்டிற்கு நான் உட்படுகிறேன்.

303.

यद्यधर्मो न बलवान्स्यादयं राक्षसेश्वरः।
स्यादयं सुरलोकस्य सशक्रस्यापि रक्षिता।।5.49.18।।

யத்யதர்மோ ந பலவாந்ஸ்யாதயம் ராக்ஷஸேஶ்வர:.
ஸ்யாதயம் ஸுரலோகஸ்ய ஸஶக்ரஸ்யாபி
ரக்ஷிதா।।5.49.18।।

பலவானாகிய இந்த ராட்சஸ மன்னன் மட்டும், அதர்மப் பற்றில்லாதவனாக இருந்தால், தேவலோகத்தையும் தேவேந்திரனையும் கூட காப்பாற்றக் கூடியவனாக இருப்பான்.

304.

शङ्काहृतात्मा दध्यौ स कपीन्द्रं तेजसा वृतम्।
किमेष भगवान्नन्दी भवेत्साक्षादिहागतः॥5.50.2॥

ஶங்காஹ்ருதாத்மா தத்யௌ ஸ கபீந்த்ரம் தேஜஸா வ்ருதம்.
கிமேஷ பகவாந்நந்தீ பவேத்ஸாக்ஷாதிஹாகத:॥5.50.2॥

ராவணன் தேஜஸ் நிரம்பி எதிரில் நிற்கும் வானர சிரேஷ்டனைப் பார்த்து, தனக்குள் சந்தேகங்களால் நெஞ்சம் பதறி சிந்தித்தான். சாட்சாத் பகவான் நந்தியே இங்கு வந்திருக்கிறாரா?

305.

येनशप्तोऽस्मि कैलासे मया सञ्चालिते पुरा।
सोऽयं वानरमूर्तिस्स्यात्किंस्विद्बाणो महाऽसुरः॥5.50.3॥.

யேநஶப்தோஸ்மி கைலாஸே மயா ஸஞ்சாலிதே புரா.
ஸோயம் வாநரமூர்திஸ் ஸ்யாத்கிம்ஸ்வித் பாணோ மஹா஽ஸுர:॥5.50.3॥

நான் முன்பு கைலாசமலையைப் பிடித்து அசைத்தபோது என்னைச் சபித்தாரே, அந்த பகவான் நந்தியோ, அல்லது, அந்த பாணாசுரனே இம்மாதிரி வானர உருவத்துடன் வந்திருக்கிறானோ?

306.

वैरूप्यमङ्गेषु कशाभिघातो मौण्ड्यं तथा लक्षणसन्निपातः।
एतान्हि दूते प्रवदन्ति दण्डान्वधस्तु दूतस्य न नः श्रुतोऽस्ति।।5.52.15।।

வைரூப்யமங்கேஷு கஶாபிகாதோ மௌண்ட்யம் ததா லக்ஷணஸந்நிபாத:.
ஏதாந்ஹி தூதே ப்ரவதந்தி தண்டாந் வதஸ்து தூதஸ்ய ந ந:ஶ்ருதோஸ்தி 5.52.15।।

உடல் அங்கங்களைச் சிதைத்தல்; கசையடி கொடுத்தல்; மொட்டையடித்தல்; உருவத்தை அலங்கோலப்படுத்தல் - என்பவைகளை, தூதனுக்கு உரிய தண்டனைகளாகக் கூறுகிறார்கள்; தூத வதம் என்பது நம்மால் கேட்கப்பட்டதேயில்லை

307.

उपतस्थे विशालाक्षी प्रयता हव्यवाहनम्।
यद्यस्ति पतिशुश्रूषा यद्यस्ति चरितं तपः।।5.53.28।।

உபதஸ்தே விசாலாக்ஷீ ப்ரயதா ஹவ்யவாஹநம்.
யத்யஸ்தி பதிஶுச்ரூஷா யத்யஸ்தி சரிதம் தப:.|| 5.53.28

அகன்ற கண்களையுடைய சீதை, சுத்தமான இதயத்துடன் அக்னி பகவானை வேண்டிக் கொண்டாள். நான் என் கணவருக்குப் பணிவிடைகள் செய்தது உண்மையானால், நான் தவம் செய்து கொண்டிருப்பது நிச்சயமானால்............

308.

यदि चास्त्येकपत्नीत्वं शीतो भव हनूमतः।।
यदि किञ्चिदनुक्रोशस्तस्य मय्यस्ति धीमतः।।5.53.29।।
यदि वा भाग्यशेषो मे शीतो भव हनूमतः ।

யதி சாஸ்த்யேகபத்நீத்வம் சீதோபவ ஹநூமத:।।
யதி கிஞ்சிதநுக்ரோஸஸ்தஸ்ய மய்யஸ்தி தீமத:।।5.53.29।।
யதி வா பாக்யஸேஷோ மே ஸீதொ பவ ஹனூமத:

நான் கற்புடையவள் என்பது நிஜமானால், ஞானியாகிய ஸ்ரீராகவனுக்கு என்னிடம் கொஞ்சமேனும் இரக்கம் இருப்பது உண்மையானால், அனுமானுக்கு குளிர்ச்சியைக் கொடுப்பீராக. எனக்கு இன்னம் சிறிதளவேனும் நன்மை ஏற்படுவதற்கு இடமிருக்குமேயானால், அனுமானுக்குக் குளிர்ச்சியைக் கொடுப்பீராக.

309.

यदि मां वृत्तसंपन्नां तत्समागमलालसाम् ।
स विजानाति धर्मात्मा शीतो भव हनूमतः ||5.53.30||

யதி மாம் வ்ருத்தஸம்பன்னாம் தத்ஸமாகமலாலஸாம்.
ஸ விஜானாதி தர்மாத்மா ஸீதோ பவ ஹனூமத:.||5.53.30||

தர்மாத்மாவான ஸ்ரீராமன் நல்ல நடத்தையுடனும் அவரைக் காணவேண்டுமென்று பேராவல் கொண்டிருப்பவளுமாக, என்னை அறிந்திருப்பது உண்மையானால், அனுமானுக்குக் குளிர்ச்சையைக் கொடுப்பீராக.

## 310.

यदि मां तारयेदार्यः सुग्रीवः सत्यसंगरः ।
अस्माद् दुःखांबुसंरोधात् शीतो भव हनूमतः
||5.53.31||

யதி மாம் தாரயேதார்ய: ஸுக்ரீவ: ஸத்யஸங்கர:.
அஸ்மாத் துக்காம்புஸம்ரோதாத் ஶீதோ பவ
ஹனூமத:.||5.53.31||

உயர்ந்தவரான, ஸத்தியம் தவறாத ஸுக்ரீவன் என்னை இந்த துக்கப்பெருங்கடலிலிருந்து கரையேற்றுவாரானால், அனுமானுக்குக் குளிர்ச்சையைக் கொடுப்பீராக.

## 311.

धन्यास्ते पुरुषश्रेष्ठा ये बुद्ध्या कोपमुत्थितम्।
निरुन्धन्ति महात्मानो दीप्तमग्निमिवाम्भसा।।5.55.3।।

தந்யாஸ்தே புருஷஶ்ரேஷ்டா யே புத்த்யா
கோபமுத்திதம்.
நிருந்தந்தி மஹாத்மானோ தீப்தமக்நிமிவாம்பஸா।।5.55.3।।

எரிந்து கொண்டிருக்கும் நெருப்பைத் தண்ணீரால் அணைப்பது போல, பொங்கி வரும் கோபத்தைத் தன் அறிவினால் அடக்குகிறார்களே, அந்த மகாத்மாக்கள் அல்லவா, புருஷ சிரேஷ்டர்கள்.

312.

क्रुद्धः पापं न कुर्यात्कः क्रुद्धो हन्याद्गुरूनपि।
क्रुद्धः परुषया वाचा नरस्साधूनधिक्षिपेत्।।5.55.4।।

க்ருத்த: பாபம் ந குர்யாத் க:க்ருத்தோ ஹந்யாத் குரூநபி.
க்ருத்த: பருஷயா வாசா நரஸ்ஸாதூநதிக்ஷிபேத்।।5.55.4।।

எந்த கோபம் கொண்டவன் பாவத்தைச் செயாமலிருப்பான்? கோபம் கொண்டவன் ஆசாரியனையும் கொல்வானன்றோ? கோபம் கொண்ட மனிதன், கடுமையான சொற்களால் சாதுக்களை இழித்துரைப்பான்.

313.

यो हि भृत्यो नियुक्तः सन् भर्त्रा कर्मणि दुष्करे || 6.1.7
कुर्यात्तदनुरागेण तमाहुः पुरुषोत्तमम् |

யோ ஹி ப்ருத்யோ நியுக்த:ஸந் பர்த்ரா கர்மணி துஷ்கரே || ௬-௧-7
குர்யாத் ததுனுராகேண தமாஹு: புருஷோத்தமம் |

எந்த சேவகன் எஜமானனால் கஷ்டமான பணியில் நியமிக்கப்பட்டு, அப்பணியை நிறைவேற்றி அது சம்பந்தப்பட்ட வேறொரு பணியையும் செய்து முடிப்பானாகில், அவன் சேவகர்களுக்குள் உத்தமமானவன் என்று கூறுகிறார்கள்.

314.

यो नियुक्तः परं कार्यं न कुर्यान्नृपतेः प्रियम् || 6.1.8
भृत्यो युक्तः समर्थश्च तमाहुर्मध्यमं नरम् |

யோ நியுக்த꞉ பரம் கார்யம் ந குர்யாந்ருபதே꞉ ப்ரியம் ॥
6-1-8
ப்ருத்யோ யுக்த꞉ ஸமர்தஶ்ச தமாஹுர்மத்யமம் நரம் ।

எந்த சேவகன் எஜமானனால் பணியில் நியமிக்கப்பட்டு,
தகுதியும் சாமர்த்தியமும் இருந்துங்கூட,
எஜமானனுடைய வேறொரு பிரியமான காரியத்தைச்
செய்யாவிடில், அவன் மத்தியம சேவகனாக
எண்ணப்படுகிறான்.

315.

नियुक्तो नृपतेः कार्यं न कुर्याद् यः समाहितः ।6.1.9
भृत्यो युक्तः समर्थश्च तमाहुः पुरुषाधमम् ॥

நியுக்தோ ந்ருபதே꞉ கார்யம் ந குர்யாத் ய꞉ ஸமாஹித꞉
॥ 6-1-9
ப்ருத்யோ யுக்த꞉ ஸமர்த்தஶ்ச தமாஹு꞉ புருஷாதமம்.

எந்த சேவகன் எஜமானனால் பணியில் நியமிக்கப்பட்டு,
தகுதியும் சாமர்த்தியமும் இருந்துங்கூட,
எஜமானனுடைய காரியத்தைக் கவனத்துடன்
செய்யாவிடில், அவன் கீழ்மட்ட சேவகனாக
எண்ணப்படுகிறான்.

316.

एष सर्वस्वभूतस्तु परिष्वङ्गो हनूमतः || 6.1.13
मया कालमिमं प्राप्य दत्तस्तस्य महात्मनः ॥

ஏஷ ஸர்வஸ்வபூதஸ்து பரிஷ்வங்கோ ஹனூமத꞉ || 6-1-13
மயா காலமிமம் ப்ராப்ய தத்தஸ் தஸ்ய மஹாத்மன꞉

(ராமர் சொன்னது) இச்சமயம் நான் மஹாத்மாவான ஹனுமாருக்கு என் திடமான ஆலிங்கனத்தைத்தான் தர முடியும்; ஏனெனில் இதுதான் என்னிடம் உள்ள ஸகலமுமாகும்.

317.

मन्त्रिभिर्हित सम्युक्तैः समर्थैर्मन्त्र निर्णये || 6.6.7
मित्रैर्वाऽपि समानार्थैर्बान्धवैरपि वा हितैः |

மந்த்ரிபிர் ஹிதஸம்யுக்தை꞉ ஸமர்தைர் மந்த்ரநிர்ணயே || 6-6-7
மித்ரைர் வாபி ஸமாநார்த்தைர் பாந்தவைரபிவா ஹிதை꞉ |

நல்லதை எண்ணும் அமைச்சர்களுடன் கூடி, அதேபோல் மந்திராலோசனையில் சிறந்த, சாமர்த்தியம் மிக்க நண்பர்களுடன் சேர்ந்து, நன்மையைக் கூறும் உறவினர்களுடன் கூடி ......

318.

सहितो मन्त्रयित्वा यः कर्मारम्भान् प्रवर्तयेत् || 6.6.8
दैवे च कुरुते यत्नं तमाहुः पुरुषोत्तमम् |

ஸஹிதோ மந்த்ரயித்வா ய꞉கர்மாரம்பாந் ப்ரவர்தயேத் ||
6-6-8
தைவேச குருதே யத்நம் தமாஹு꞉ புருஷோத்தமம் |

ஆலோசித்து, எவன் செயலில் இறங்கத் தொடங்குகிறானோ, தெய்வத்தின் துணை கொண்டு முயற்சிக்கிறானோ, அவனை உத்தம புருஷனாகச் சொல்வர்.

319.

एकोऽर्थं विमृशेदेको धर्मे प्रकुरुते मनः || 6.6.9
एकः कार्याणि कुरुते तमाहुर्मध्यमं नरम् |

ஏகோர்த்தம் விம்ருஶேதேகோ தர்மே ப்ரகுருதே மந꞉ || 6-
6-9
ஏக꞉ கார்யாணி குருதே தமாஹுர் மத்யமம் நரம் |

எவன் தனியாகவே காரியங்களை அலசிச் சிந்திக்கிறானோ, தனியாகவே தர்மத்தில் மனதைச் செலுத்துகிறானோ, தனியாகவே செயல்களைச் செய்கிறானோ, அவனை மத்தியம புருஷனென்று கூறுவர்.

320.

गुणदोषौ अनिश्चित्य त्यक्त्वा दैव व्यपाश्रयम् || 6.6.10
करिष्यामीति यः कार्यमुपेक्षेत् स नराधमः |

குணதோஷௌ அநிஶ்சித்ய த்யக்த்வா தைவ
வ்யபாஶ்ரயம் || 6-6-10
கரிஷ்யாமீதி ய꞉ கார்யமுபேக்ஷேத் ஸ நராதம꞉ |

நல்லது, கெட்டது இவற்றைத் தீர்மானிக்காமல், தெய்வத்தின் துணையையும் விட்டு, நான் செய்வேன் என்று செயலைத் தொடங்கி, பின்னர் அச்செயலையும் அலக்ஷியம் செய்பவன் கீழ்மட்ட புருஷனாவான்.

321.

यथेमे पुरुषा नित्यमुत्तमाधममध्यमाः ॥ 6.6.11
एवं मन्त्रोऽपि विज्ञेय उत्तमाधममध्यमः ।

யதேமே புருஷா நித்யமுத்தமாதமமத்யமா꞉ ||
ஏவம் மந்த்ரோபி விக்ஞேய உத்தமாதமமத்யம꞉ |

இந்த புருஷர்கள் எவ்வாறு எப்போதும் உத்தம, மத்தியம, கீழ்மட்ட ஆகிய நிலையில் உள்ளார்களோ, அதேபோல் மந்திரவிசாரணையும் உத்தம, மத்தியம, கீழ்மட்ட ஆகிய மூன்று நிலைகளில் உள்ளதென்று அறியவேண்டும்.

322.

ऐकमत्यमुपागम्य शास्त्रदृष्टेन चक्षुषा । 6.6.12
मन्त्रिणो यत्र निरस्तास्तमाहुर्मन्त्रमुत्तमम् |

ஐகமத்யமுபாகம்ய ஶாஸ்த்ரத்ருஷ்டேந சக்ஷுஷா || 6-6-12
மந்த்ரிணோ யத்ர நிரஸ்தாஸ் தமாஹுர் மந்த்ரமுத்தமம் |

ஶாஸ்திரப்படி ஆராய்ந்து எல்லா மந்திரிகளும் ஒரே அபிப்பிராயத்தை அடைந்து செயல்படும்போது, அந்த மந்திராலோசனை உத்தமமென்று கூறுவர்.

323.

बह्व्योऽपि मतयो गत्वा मन्त्रिणो ह्यर्थ निर्णये || 6.6.13
पुनर्यत्रैकतां प्राप्तः स मन्त्रो मध्यमः स्मृतः |

பஹ்வ்யோபி மதயோ கத்வா மந்த்ரிணோ
ஹ்யர்த்தநிர்ணயே || 6-6-13
புநர்யத்ரைகதாம் ப்ராப்த: ஸமந்த்ரோ மத்யம:
ஸ்ம்ருத: |

ஆரம்பத்தில் பலவிதமான அபிப்பிராயங்கள் இருந்து, பின்னர் மந்திரிகள் சேர்ந்து ஆலோசித்து செய்யவேண்டியதில் ஒரே முடிவுக்கு வரும்போது, அந்த மந்திராலோசனை மத்தியமமென்று கூறுவர்.

324.

अन्योन्य मतिमास्थाय यत्र सम्प्रतिभाष्यते || 6.6.14
न चैकमत्ये श्रेयोऽस्ति मन्त्रः सोऽधम उच्यते |

அந்யோந்யமதிமாஸ்தாய யத்ர ஸம்ப்ரதிபாஷ்யதே || 6-6-14

நசைகமத்யே ஶ்ரேயோஸ்தி மந்த்ர:. ஸோதம உச்யதே ।
வெவ்வேறு புத்திக் கோணங்களின் துணைகொண்டு, எல்லா பக்கமும் போட்டியுடன் சொற்பொழிவு நடந்து, கடைசியில் ஒரே முடிவிற்கு வந்தும், அம்முடிவு நன்மை பயப்பதாக இல்லையென்றால், அந்த மந்திராலோசனை கீழ்மட்டமென்று கூறுவர்.

325.

अनुपायेन कर्माणि विपरीतानि यानि च | 6.12.31
क्रियमाणानि दुष्यन्ति हवींष्यप्रयतेष्विव ||

அனுபாயேன கர்மாணி விபரீதாநி யாநிச ।
க்ரியமாணாநி துஷ்யந்தி ஹவீம்ஷ்யப்ரயதேஷ்விவ ||
6-12-31

உசிதமான உபாயத்துடன் செய்யாமல், ஶாஸ்திர, சூழ்நிலைகளுக்குப் பொருந்தாமல், செய்யப்பட்ட செயல்கள், குற்றமுள்ள யக்ஞத்தில் ஹோமம் செய்யப்பட்ட ஹவிஸைப்போல, பாபத்தில் முடிகின்றன.

326.

यः पश्चात्पूर्वकार्याणि कर्माण्यभिचिकीर्षति | 6.12.32
पूर्वं चापरकर्याणि न स वेद नयानयौ ||

ய: பஶ்சாத் பூர்வகார்யாணி கர்மாண்யபிசிகீர்ஷதி ।
பூர்வம் சாபரகர்யாணி ந ஸ வேத நயாநயௌ ॥ 6-12-32

எவன் முதலில் செய்துமுடிக்கவேண்டிய காரியங்களைப் பின்னாலும், பின்னால் செய்யவேண்டிய காரியங்களை முன்னாலும் செய்கிறானோ, அவன் நீதி, அநீதியை அறியான்.

327.

परस्य वीर्यं स्वबलं च बुद्ध्वा स्थानं क्षयं चैव तथैव वृद्धिम् |
6.14.22
तथा स्वपक्षेऽप्यनुमृश्य बुद्ध्या वदेत् क्षमं स्वामिहितं स मन्त्री ||

பரஸ்ய வீர்யம் ஸ்வபலம்ச புத்த்வா ஸ்தாநம் க்ஷயம்சைவ
ததைவ வ்ருத்திம் ।
ததா ஸ்வபக்ஷேப்யனும்ருஶ்ய புத்த்யா வதேத் க்ஷமம்
ஸ்வாமிஹிதம் ஸ மந்த்ரீ ॥ 6-14-22

எதிரியின் வீரியம், தன்பக்கத்தின் பலம் இவற்றை நன்கு ஆய்ந்து, இரு தரப்பாரின் நிலை, குன்றுதல், வளர்தல் இவற்றையும் புத்திபூர்வமாகக் கருதி, எஜமானனுக்கு நன்மை பயப்பதும், உசிதமானதுமான விஷயத்தை எடுத்துச் சொல்பவன்தான் உண்மையான மந்திரி.

328.

वसेत् सह सपत्नेन क्रुद्धेनाशीविषेण च | 6.16.2
न तु मित्रप्रवादेन संवसेच्छत्रुसेविना ||

வஸேத் ஸஹ ஸபத்னேந க்ருத்தேநாஶீவிஷேணச ।
நது மித்ரப்ரவாதேந ஸம்வஸேச்சத்ருஸேவினா ॥ 6-16-2

விரோதி, கோபமுற்ற விஷங்கொண்ட பாம்பு இவர்களுடன்கூட வாழ்ந்தாலும் வாழலாம். ஆனால் நண்பன் என்று கூறிக்கொண்டு எதிரியுடன் சேர்ந்திருப்பவனுடன் ஒருபோதும் வாழக்கூடாது.

329.

विद्यते गोषु सम्पन्नम् विद्यते ज्ञातितो भयम् |
विद्यते स्त्रीषु चापल्यम् विद्यते ब्राह्मणे तपः || 6.16.9

வித்யதே கோஷு ஸம்பந்நம் வித்யதே ஞாதிதோ பயம் ।
வித்யதே ஸ்த்ரீஷு சாபல்யம் வித்யதே ப்ராம்மணே தப꞉ ॥ 6-16-9

பசுமாடுகளில் (பால்) ஸம்ருத்தி உள்ளது. உறவினர்களிடமிருந்து பயம் உள்ளது. பெண்களிடம் நிலையின்மை உள்ளது. பிராம்மணனிடம் தவம் உள்ளது.

330.

यथा पूर्वं गजः स्नात्वा गृह्य हस्तेन वै रजः ।
दूषयत्यात्मनो देहं तथानार्येषु सौहृदम् ॥6.16.15

யதா பூர்வம் கஜ: ஸ்னாத்வா க்ருஹ்ய ஹஸ்தேன வை ரஜ:.
தூஷயத்யாத்மனோ தேஹம் ததாநார்யேஷு ஸௌஹ்ருதம்.
||६-१६-१५

யானை முதலில் நன்கு குளித்துவிட்டு, பின்னர் தன்
துதிக்கையினால் மண்ணை வாரியடித்து தன் தேகத்தை
எவ்வாறு அழுக்காக்கிக் கொள்கிறதோ, அவ்வாறே
கெட்டவர்களின் நட்பு கெடுத்துவிடும்.

331.

आकारश्छाद्यमानोऽपि न शक्यो विनिगूहितुम् |
बलाद्धि विवृणोत्येव भावमन्तर्गतं नृणाम् || 6.17.64

ஆகாரஶ் சாத்யமானோபி ந ஶக்யோ விநிகூஹிதும் |
பலாத்தி விவ்ருணோத்யேவ பாவமந்தர்கதம் ந்ருணாம்
||6-17-64

தன் வெளி உருவத்தை ஒருவன் எவ்வளவுதான்
மறைத்துக்கொண்டாலும், உள் எண்ணத்தை மறைக்க
முடியாது. வெளி உருவம் மனிதர்களின் உள் கருத்தை
எப்படியும் பலவந்தமாகக் காட்டிக் கொடுத்துவிடும்.

332.

आर्तो वा यदि वा दृप्तः परेषां शरणं गतः || 6.18.28

अरिः प्राणान् परित्यज्य रक्षितव्यः कृतात्मना |

ஆர்தோவா யதிவா த்ருப்த⁞ பரேஷாம் ஶரணம் கத⁞ ||6-18-28
அரி⁞ ப்ராணாந் பரித்யஜ்ய ரக்ஷிதவ்ய⁞ க்ருதாத்மனா ।

(ராமர் விபீஷண சரணாகதியின் போது) எதிரி கஷ்டப்பட்டவனோ அல்லது கர்வங்கொண்டவனோ, சரணாகதி செய்துவிட்டால், நல்ல மனதுடையவன் தன் பிராணனையே வேண்டுமானாலும் விட்டு, அவனைக் காக்கவேண்டும்.

333.

स चेद् भयाद् वा मोहाद् वा कामाद् वापि न रक्षति || 6.18.29

स्वया शक्त्या यथान्यायं तत् पापं लोकगर्हितम् ।

ஸ சேத் பயாத்வா மோஹாத்வா காமாத்வாபி ந ரக்ஷதி ||6-18-29
ஸ்வயா சக்த்யா யதாந்யாயம் தத்பாபம் லோககர்ஹிதம்.

அவன் பயத்தினாலோ, மயக்கத்தினாலோ, ஆசையினாலோ, சரணாகதி செய்த எதிராளியைத் தன் சக்தியினால் முறைப்படி காக்கவில்லையென்றால், அந்தப் பாபத்தை உலகம் கண்டனம் செய்யும்.

334.

विनष्टः पश्यतस्तस्य रक्षिणः शरणं गतः । 6.18.30
आदाय सुकृतं तस्य सर्वं गच्छेदरक्षितः |

வினஷ்ட: பஶ்யதஸ்தஸ்ய ரக்ஷிண: ஶரணம் கத:.
ஆதாய ஸுக்ருதம் தஸ்ய ஸர்வம்கச்சேதரக்ஷித.: |
6.18.30

யாரிடம் சரணாகதி செய்தானோ, அவன் பார்க்கையிலேயே, சரணாகதி செய்தவன் காக்கப்படாமலேயே அழிவையடைந்துவிட்டால், அவன் முன்னவனுடைய புண்ணியம் யாவற்றையும் கவர்ந்துகொண்டு செல்வான்.

335.

एवं दोषो महानत्र प्रपन्नानामरक्षणे || 6.18.31
अस्वर्ग्यं चायशस्यं च बलवीर्यविनाशनम् ।

ஏவம் தோஷோ மஹானத்ர ப்ரபன்னானாமரக்ஷணே.||
6.18.31
அஸ்வர்க்யம் சாயஶஸ்யம்ச பலவீர்யவினாஶநம் |

சரணாகதி செய்தவனைக் காக்காமை பெரிய குற்றமாகும். அது ஸ்வர்க்கம் போகல், நீடித்த புகழ், பலம், வீரியம் யாவற்றையும் அழித்துவிடும்.

## 336.

करिष्यामि यथार्थं तु कण्डोर्वचनमुत्तमम् || 6.18.32
धर्मिष्ठं च यशस्यं च स्वर्ग्यं स्यात् तु फलोदये |

கரிஷ்யாமி யதார்த்தம்து கண்டோர் வசநமுத்தமம் ||6-18-32
தர்மிஷ்டம்ச யஶஸ்யம்ச ஸ்வர்க்யம் ஸ்யாத் து பலோதயே|

ஆகையால் நான் கண்டு மஹரிஷியின் நடைமுறைக்குகந்த உயர்ந்த வசனப்படி செய்வேன். அது முடிவில் நீடித்த புகழ், ஸ்வர்க்கம் இவற்றை அளிக்கவல்லது.

## 337.

सकृदेव प्रपन्नाय तवास्मीति च याचते || 6.18.33
अभयं सर्वभूतेभ्यो ददाम्येतद् व्रतम् मम |

ஸக்ருதேவ ப்ரபன்னாய தவாஸ்மீதிச யாசதே||6-18-33
அபயம் ஸர்வபூதேப்யோ ததாம்யேதத் வ்ரதம் மம |

ஒரு தடவையாவது சரண் என்று வந்து, 'நான் தங்களைச் சேர்ந்தவன்' என்று ஒருவன் யாசிப்பானேயாகில், நான் அவனுக்கு எல்லா ஜீவராசிகளிலிருந்தும் பயமின்மையை நல்குகிறேன். இது என்னுடைய விரதம்.

338.

आनयैनं हरिश्रेष्ठ दत्तमस्याभयं मया || 6.18.34

विभीषणो वा सुग्रीव यदि वा रावणः स्वयम् |

ஆநயைனம் ஹரிஶ்ரேஷ்ட தத்தமஸ்யாபயம் மயா ||6-18-34
விபீஷணோ வா ஸுக்ரீவ யதி வா ராவண: ஸ்வயம் |

வானரஶ்ரேஷ்டனே! சுக்ரீவா! அவனை அழைத்து வா. விபீஷணனோ, ராவணனே ஸ்வயம் சரணகதி என்று வந்தாலும் அவனுக்கு நான் அபயப் பிரதானம் செய்துவிட்டேன்.

339.

अवलेप: समुद्रस्य न दर्शयति यः स्वयम् |
प्रशमश्च क्षमा चैव आर्जवं प्रियवादिता || 6.21.14

असामर्थ्यफला ह्येते निर्गुणेषु सतां गुणाः ।

அவலேப: ஸமுத்ரஸ்ய ந தர்ஶயதி ய: ஸ்வயம் |
ப்ரஶமஶ்ச க்ஷமா சைவ ஆர்ஜவம் ப்ரியவாதிதா || 6.21.14
அஸாமர்த்யபலா ஹ்யேதே நிர்குணேஷு ஸதாம் குணா: |

ஸமுத்திரத்திற்கு மிகவும் அகங்காரம்; அதனால்தான் நேரில் வரவில்லை. மனச்சாந்தி, பொறுமை, நேர்மை, பிரியமான சொற்களைக் கூறல் போன்ற ஸத்புருஷர்களின் குணங்களை, குணமில்லாதவர்களிடம் காண்பித்தால், அவர்கள் அந்த நல்லோரை ஸாமர்த்தியமில்லாதவரென்று நினைப்பர்.

340.

नूनमन्यां मया जातिं वारितं दानमुत्तमम् | 6.32.30
याहमद्येह शोचामि भार्या सर्वातिथेरपि ||

நூனமன்யாம் மயா ஜாதிம் வாரிதம் தாநமுத்தமம் ।
யாஹமத்யேஹ ஶோசாமி பார்யா ஸர்வாதிதேரபி ॥ 6-32-30

யாருடைய வீட்டில் எல்லோரும் யாசகர்களாக வருவரோ, அந்த ஸ்ரீராமருடைய பத்தினியாகிய நான் இன்று துக்கிப்பதற்குக் காரணம், நிச்சயமாக முன் பிறவியில் உத்தமமான தானத்தில் தடங்கல் விளைவித்திருப்பேன்.

341.

संदधानो हि कालेन विगृह्णंश्चारिभिः सह ।
स्वपक्षवर्धनं कुर्वन् महदैश्वर्यमश्नुते || 6.35.8

ஸந்ததானோ ஹி காலேன விக்ருஹ்ணம்ஶ்சாரிபி: ஸஹ ।
ஸ்வபக்ஷவர்தநம் குர்வந் மஹதைஶ்வர்யமஶ்னுதே ॥ 6.35.8

சமயத்திற்குத்தக்கபடி எதிரிகளுடன் சமாதானமோ, விரோதமோ செய்துகொண்டு, தன் பக்ஷம் நல்ல விருத்தி செய்பவன் பெரிய ஐஸ்வரியத்தை அடைகிறான்.

342.

हीयमानेन कर्तव्यो राज्ञा संधिः समेन च |
न शत्रुमवमन्येत ज्यायान् कुर्वीत विग्रहम् || 6.35.9

ஹீயமானேன கர்தவ்யோ ராஜ்ஞா ஸந்தி: ஸமேநச |
ந ஶத்ருமவமந்யேத ஜ்யாயாந் குர்வீத விக்ரஹம் ||6-35-9

எந்த அரசனின் சக்தி குன்றிக்கொண்டிருக்கிறதோ அல்லது எதிரியின் அளவே சக்தியுள்ளவனாக உள்ளானோ, அவன் சமாதானம் செய்துகொள்ளவேண்டும். எதிரியை அவமானப்படுத்தக்கூடாது. பலம் அதிகமாக இருப்பின், எதிரியின் மீது போர் புரியலாம்.

343.

एको हि कुरुते पापं कालपाशवशं गतः |
नीचेनात्मापचारेण कुलं तेन विनश्यति || 6.38.7

ஏகோ ஹி குருதே பாபம் காலபாஶ வஶம் கத: |
நீசேநாத்மாபசாரேண குலம் தேந விநஶ்யதி || 6-38-7

காலபாசத்தில் கட்டுண்ட புருஷன் பாபச்செயலில் இறங்குகிறான். அந்த இழிந்தவனுடைய குற்றத்தினால் அவனுடைய குலமே நாசமடையும்.

344.

वायुसूनोः सुहृत्त्वेन भक्त्या परमया च सः || 6.59.119
शत्रूणामप्रकम्प्योऽपि लघुत्वमगमत्कपेः |

வாயுஸூனோ: ஸுஹ்ருத்வேந பக்த்யா பரமயா ச ஸ:
|| 6-59-119
ஶத்ரூணாமப்ரகம்ப்யோऽபி லகுத்வமகமத் கபே: |

(போர்க்களத்தில்) லக்ஷ்மணர், எதிரிகளுக்கு அசைக்கமுடியாதவராயினும், வாயுபுத்திரனான ஹனுமாரின் நட்பினாலும், பரம பக்தியினாலும், அவருடைய கைகளுக்கு லகுவாக ஆனார். (ஹனுமார் லக்ஷ்மணனைத் தூக்கிக்கொண்டு ராமரிடம் சென்றார்.)

345.

शीघ्रं खल्वभ्युपेतं त्वां फलं पापस्य कर्मणः |
निरयेष्वेव पतनं यथा दुष्कृतकर्मणः || 6.63.3

ஶீக்ரம் கல்வப்யுபேதம் த்வாம் பலம் பாபஸ்ய கர்மண: |
நிரயேஷ்வேவ பதநம் யதா துஷ்க்ருதகர்மண: || 6-63-3

(கும்பகர்ணன் ராவணனிடம்) உன் பாபச் செயலின் பலன் உனக்கு சீக்கிரமே கிடைத்துவிட்டது. இது பாபிகள் நரகங்களில் விழுவது போன்று.

346.

त्रयाणां पञ्चधा योगं कर्मणां यः प्रपद्यते |
सचिवैः समयं कृत्वा स सम्यगभिवर्तते || 6.63.7

த்ரயாணாம் பஞ்சதா யோகம் கர்மணாம் ய: ப்ரபத்யதே ।
ஸசிவை: ஸமயம் க்ருத்வா ஸ ஸம்யகபிவர்ததே ॥ 6-63-7

எந்த அரசன் மந்திரிகளுடன் கலந்தாலோசித்து, ஸாம, தான, தண்டமாகிற மூன்று செயல்களின் ஐந்துவித பிரயோகங்களை உபயோகப்படுத்துகிறானோ, அவனே நன்கு சரியாகச் செயல் புரிந்தவனாவான். (ஐந்து பிரயோகங்கள்: காரியம் ஆரம்பிக்க உபாயம்; ஆட்கள், பொருட்கள் ஆகிய செல்வம்; இடம், நேரம் இவற்றின் பாகுபாடு; விபத்தைத் தவிர்க்க உபாயம்; காரியத்தை நிறைவேற்றல்).

347.

त्रिषु चैतेषु यच्छ्रेष्ठं श्रुत्वा तन्नावबुध्यते |
राजा वा राजमात्रो वा व्यर्थं तस्य बहुश्रुतम् || 6.63.10

த்ரிஷு சைதேஷு யச்ச்ரேரேஷ்டம் ஶ்ருத்வா தன்னாவபுத்யதே ।
ராஜாவா ராஜமாத்ரோவா வ்யர்தம் தஸ்ய பஹுஶ்ருதம் ॥ 6-63-10

தர்மம், பொருள், இன்பம் மூன்றிலும் தர்மமே மேலானது (சமயம் ஏற்பட்டால் மற்ற இரண்டையும் ஒதுக்கவேண்டும்) என்று நம்பிக்கைக்குரியவர்களிடம் கேட்டுத் தெரிந்தும், எந்த அரசனோ, அரசஸ்தானத்திலிருப்பவனோ புரிந்து செயலாற்றவில்லையோ, அவனுடைய பெருங்கல்வி வீணே.

348.

अस्मिञ्जीवति वीरे तु हतमप्यहतं बलम् |
हनूमत्युज्झितप्राणे जीवन्तोऽपि मृता वयम् || 6.74.22

அஸ்மிந் ஜீவதி வீரேது ஹதமப்யஹதம் பலம் ।
ஹனூமத்யுஜ்ஜிதப்ராணே ஜீவந்தோபி ம்ருதாவயம் ॥
6-74-22

(ஜாம்பவான் விபீஷணனிடம் யுத்தபூமியில்) இந்த ஹனுமார் என்கிற வீரர் ஜீவித்திருந்தால், சேனை மரித்தும் மரிக்காதது போன்றது. ஹனுமார் பிராணனை இழந்தால், நாமெல்லோரும் ஜீவித்திருந்தும் மரித்ததற்குச் சமமே.

349.

मृतसञ्जीवनीं चैव विशल्यकरणीमपि |
सौवर्णकरणीं चैव सन्धानीं च महौषधीम् || 6.74.33

ம்ருதஸஞ்ஜீவநீம் சைவ விஶல்யகரணீமபி ।
ஸௌவர்ணகரணீம்சைவ ஸந்தாநீம்ச மஹௌஷதீம் ॥
6-74-33

(ஜாம்பவான் ஹனுமாரிடம்) இந்த நான்கு தெய்வீக ஓஷதிகளைக் கொண்டுவா:- ம்ருதஸஞ்ஜீவனி (இறந்தவர்களைப் பிழைக்கவைப்பது); விஸல்யகரணி (அம்பு போன்றவைகளைச் சரீரத்திலிருந்து வெளிக் கொணர்ந்து ஸ்வஸ்தமாக்குவது); ஸௌவர்ணகரணி (சரீரத்திற்குப் பழைய நிறத்தையளிப்பது); ஸந்தானி (உடைந்த எலும்பு முதலானவைகளைச் சேர்த்து ஸ்வஸ்தமாக்குவது).

350.

परस्वहरणे युक्तं परदाराभिमर्शकम् || 6.87.22

त्याज्यमाहुर्दुरात्मानं वेश्म प्रज्वलितं यथा |

பரஸ்வஹரணே யுக்தம் பரதாராபிமர்ஶகம் ||6-87-22
த்யாஜ்யமாஹுர் துராத்மாநம் வேஶ்ம ப்ரஜ்வலிதம் யதா |

பிறர் பொருளைத் திருடுபவன், பிறர் மனைவியை அண்டுபவன் ஆகிய கெட்ட இதயங்கொண்டவனை, எரிந்துகொண்டிருக்கும் வீட்டினைத் தியாகம் செவதுபோல் தியாகம் செய்யவேண்டுமென்று கூறுவர்.

351.

परस्वानां च हरणं परदाराभिमर्शनम् ||6.87.23

सुहृदामतिशङ्काच त्रयो दोषा: क्षयावहा: ।

பரஸ்வானாம்ச ஹரணம் பரதாராபிமர்ஶநம் ||6- 87-23
ஸுஹ்ருதாமதிஶங்காச த்ரயோ தோஷா: க்ஷயாவஹா: |

பிறர் பொருளைத் திருடல், பிறர் மனைவியைத் தீண்டல், நல்ல இதயம் படைத்த நண்பர்களை அதிகமாகச் சந்தேகித்தல் ஆகிய மூன்று குறைகளும் அழிவினை உண்டுபன்னும்.

## 352.

धर्मात्मा सत्यसन्धश्च रामो दाशरथिर्यदि ||6.90.71
पौरुषे चाप्रतिद्वन्द्वस्तदेनं जहि रावणिम् |

தர்மாத்மா ஸத்யஸந்தஶ்ச ராமோ தாஶரதிர் யதி ||6-90-71
பௌருஷே சாப்ரதித்வந்த்வஸ்ததேநம் ஜஹி ராவணிம் |

(லக்ஷ்மணர் இந்திரஜித்துடன் யுத்த இறுதியில்)
தசரதபுத்திரனான ராமர் தர்மாத்மாவாகவும், ஸத்தியத்தில் உறுதியுள்ளவராகவும், வீரத்தில் தனக்கு நிகரானவர் யாருமில்லாதவராகவும் இருப்பாரானால், அஸ்திரமே, நீ ராவணபுத்திரனான இந்த இந்திரஜித்தைக் கொன்றுவிடு.

## 353.

गगनं गगनाकारं सागरः सागरोपमः ||6.107.52
रामरावणयोर्युद्धं रामरावणयोरिव |

ககநம் ககனாகாரம் ஸாகர: ஸாகரோபம: ||6-107-52
ராமராவணயோர் யுத்தம் ராமராவணயோரிவ |

ஆகாயம் ஆகாயம் போன்றதே. சமுத்திரம் சமுத்திரம் போன்றதே. ராமருக்கும், ராவணனுக்கும் நடந்த யுத்தமானது, ராமருக்கும், ராவணனுக்கும் நடந்த யுத்தம் போன்றதே. அதாவது, உவமை சொல்லும்படியாக வேறு யுத்தம் கிடைக்கவில்லை. அந்த யுத்தம் நிகரற்றது.

354.

मरणान्तानि वैराणि निर्वृत्तं नः प्रयोजनम् |
क्रियतामस्य संस्कारो ममाप्येष यथा तव || 6.109.25

மரணாந்தாநி வைராணி நிர்வ்ருத்தம் ந꞉ ப்ரயோஜநம் |
க்ரியதாமஸ்ய ஸம்ஸ்காரோ மமாப்யேஷ யதா தவ || 6-109-25

(ராமர் விபீஷணனிடம் ராவணன் பற்றி) விரோதங்கள் மரணம் வரையில்தான். நம்முடைய குறிக்கோளை அடைந்தோம். இவருடைய அந்திமச் சடங்குகளைச் சரிவரச் செய்வாயாக. இவர் உனக்கு எப்படியோ (எவ்வளவு பிரியமானவரோ) அப்படியே எனக்கும்.

355.

न परः पापमादत्ते परेषां पापकर्मणाम् ||6.113.45

समयो रक्षितव्यस्तु सन्तश्चारित्रभूषणाः ।

ந பர꞉ பாபமாதத்தே பரேஷாம் பாபகர்மணாம் || 6-113-45
ஸமயோ ரக்ஷிதவ்யஸ்து ஸந்தஶ் சாரித்ரபூஷணா꞉.

(ஸீதை ஹனுமாரிடம்) பிற பாபச்செயல் புரிவோரின் பாபங்களை சான்றோர்கள் தாங்களும் பின்பற்றமாட்டார்கள். நன்நடத்தையே அணிகலனாகக் கொண்ட சான்றோர்கள் தங்கள் நடத்தையை எப்போதும் காப்பர்.

356.

पापानां वा शुभानां वा वधार्हाणामथापि वा ॥6.113.46

कार्यं कारुण्यमार्येण न कश्चिन्नापराध्यति ।

பாபானாம் வா ஶுபானாம் வா வதார்ஹாணாமதாபி வா ॥
6-113-46
கார்யம் காருண்யமார்யேண ந கஶ்சின்னாபராத்யதி ।

பாபிகளாகட்டும், புண்ணியவான்களாகட்டும், வதத்திற்குரியவர்களாகவே இருக்கட்டும், அவர்களிடம் சான்றோர்கள் கருணையே காட்டுவார்கள். ஏனெனில் குற்றமே புரியாத பிராணி கிடையவே கிடையாது.

357.

लोकहिंसाविहाराणां क्रूराणां पापकर्मणाम् || 6.113.47

कुर्वतामपि पापानि नैव कार्यमशोभनम् ।

லோகஹிம்ஸாவிஹாராணாம் க்ரூராணாம்
பாபகர்மணாம் || 6-113-47
குர்வதாமபி பாபானி நைவ கார்யமஶோபனம் ।

ஜனங்களுக்கு ஹிம்ஸையே செய்வதில் ரமிப்பவர், கொடுமையாளர், பாபச்செயல் செய்பவர் ஆகியோருக்குக்கூட அமங்களமான காரியத்தைச் செய்யக்கூடாது.

358.

व्यसनेषु न कृच्छ्रेषु न युद्धेषु स्वयंवरे |
न क्रतौ नो विवाहे च दर्शनं दूष्यते स्त्रियाः ||6.114.28

வ்யஸனேஷு ந க்ருச்ரேஷு ந யுத்தேஷு ஸ்வயம்வரே ।
ந க்ரதௌ நோ விவாஹேச தர்ஶநம் தூஷ்யதே ஸ்த்ரியா: ॥
6-114-28

ஆபத்துக் காலத்தில், சரீர, மனது சம்பந்தப்பட்ட துன்பத்தில், யுத்தத்தில், ஸ்வயம்வரத்தில், யக்ஞத்தில், விவாகத்தில் பெண்கள் பிறரால் பார்க்கப்பட்டால் குற்றமில்லை.

356.

कर्मणा मनसा वाचा यथा नातिचराम्यहम् |
राघवं सर्वधर्मज्ञं तथा मां पातु पावकः || 6.116.27

கர்மணா மநஸா வாசா யதா நாதிசராம்யஹம் ।
ராகவம் ஸர்வதர்மஞும் ததா மாம் பாது பாவக: ॥
6-116-27

(ஸீதை அக்கினியிடம்) நான் செயலினால், மனத்தினால், வாக்கினால், எல்லா தர்மங்களுமறிந்த ராமரை ஒருபோதும் மீறியதில்லையானால், அக்கினி என்னைக் காப்பாற்றட்டும்.

## 360.

नेयमर्हति चैश्वर्यं रावणान्तःपुरे शुभा |
अनन्या हि मया सीता भास्करेण प्रभा यथा ||6.118.19

நேயமர்ஹதி சைஶ்வர்யம் ராவணாந்த꞉புரே ஶுபா ।
அநந்யா ஹி மயா ஸீதா பாஸ்கரேண ப்ரபா யதா ॥
6-118-19

(ராமர்) இந்த மங்களமான ஸீதை ராவணனுடைய அந்தப்புரத்தில் ஐஶ்வரியத்தில் இருக்கமுடியாது. ஏனெனில் சூரியனிடமிருந்து ஒளி எவ்வாறு பிரியாமலிருக்கிறதோ, அவ்வாறே ஸீதையும் என்னிடமிருந்து எப்போதுமே பிரியாதவள்.

## 361.

सर्वे क्षयान्ता निचयाः पतनान्ताः समुच्छ्रयाः ।
संयोगा विप्रयोगान्ता मरणान्तं च जीवितम् ॥7.52.11

ஸர்வே க்ஷயாந்தா நிசயா꞉ பதனாந்தா꞉ ஸமுச்ரயா꞉ ।
ஸம்யோகா விப்ரயோகாந்தா மரணாந்தம் ச ஜீவிதம் ॥
7.52.11

உலகில் சேர்த்த பொருட்களெல்லாம் அழிவடைகின்றன. எழுச்சிகள் வீழ்ச்சியில் முடிகின்றன. மனிதர்கள் சேர்வதும் பிரிவதற்கே. வாழ்க்கையும் மரணத்தில் முடிகிறது.

362.

तस्मात् पुत्रेषु दारेषु मित्रेषु च धनेषु च ।
नातिप्रसङ्गः कर्तव्यो विप्रयोगो हि तैर्ध्रुवम् ॥7.52.12

தஸ்மாத் புத்ரேஷு தாரேஷு மித்ரேஷு ச தனேஷு ச ।
நாதிப்ரஸங்க: கர்தவ்யோ விப்ரயோகோ ஹி
தைர்த்ருவம் ॥7.52.12

ஆகையால் மனைவி, புத்திரர்கள், நண்பர்கள், செல்வங்கள் இவற்றில் அதிகப் பற்றுதல் கூடாது; ஏனெனில் அவர்களிடமிருந்து பிரிவு நிச்சயம்.

363.

धारणाद् धर्म इत्याहुर्धर्मेण विधृता: प्रजाः ।
यस्माद् धारयते सर्वं त्रैलोक्यं सचराचरम् ॥7.59.7

தாரணாத் தர்ம இத்யாஹு: தர்மேண வித்ருதா: ப்ரஜா: ।
யஸ்மாத் தாரயதே ஸர்வம் த்ரைலோக்யம் ஸசராசரம் ॥
7.59.7

உலகம் முழுவதையும் தாங்குவதால் (தரிப்பதால்) தர்மம் என்று அழைக்கப்படுகிறது. தர்மமே எல்லாப் பிரஜைகளையும் தாங்குகிறது. தர்மமே அசையும் பொருள், அசையாப் பொருள் ஆகிய எல்லாவற்றுடன் கூடிய மூன்று உலகங்களையும் தாங்குகிறது.

364.

क्रोधः प्राणहरः शत्रुः क्रोधो मित्रमुखो रिपुः ।
क्रोधो ह्यसिर्महातीक्ष्णः सर्वं क्रोधोऽपकर्षति ॥7.59.21

க்ரோத॰ ப்ராணஹர॰ ஶத்ரு॰ க்ரோதோ மித்ரமுகோ ரிபு॰ ।
க்ரோதோ ஹ்யஸிர்மஹாதீக்ஷ்ண॰ ஸர்வம்
க்ரோதோபகர்ஷதி ||7.59.21

கோபம் பிராணனை எடுத்துக்கொண்டுபோகும். கோபம் நண்பனைப்போல் வெளிவேஷம் போடும் எதிரி. கோபம் மிகவும் கூர்மையான வாள். கோபம் எல்லா நற்குணங்களையும் இழுத்துக்கொண்டுபோகும்.

365.

अधीतस्य च तप्तस्य कर्मणः सुकृतस्य च ।
षष्ठं भजति भागं तु प्रजा धर्मेण पालयन् ॥7.74.31

அதீதஸ்ய ச தப்தஸ்ய கர்மண॰ ஸுக்ருதஸ்ய ச ।
ஷஷ்டம் பஜதி பாகம் து ப்ரஜா தர்மேண பாலயன் || 7.74.31

பிரஜைகளை தர்மமாகக் காக்கும் அரசன், பிரஜைகளின் வேதக்கல்வி, தவம், நற்செயல்கள் இவற்றின் புண்ணியத்தில் ஆறிலொரு பங்கைப் பெறுகிறான்.

ॐ तत् सत्

